உ

செந்திலாண்டவன் துணை

**வித்துவான் தியாகராச செட்டியார் இயற்றிய**

# திருச்செந்தின்மாலையும்

**இலக்கணம் கச்சியப்ப முனிவர் இயற்றிய**

# திருச்செந்தூர் நான்மணிமாலையும்

இவை

குறிப்புரைகளுடன்

திருப்பனந்தாள் காசி மடத்துத் தலைவர்களாகிய

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான்

சுவாமிகளவர்கள்

பொருளுதவியைக்கொண்டு

மகாமகோபாத்தியாய டாக்டர்

உ. வே. சாமிநாதையரவர்கள் குமாரர்.

**S. கலியாண சுந்தரையரால்**

சென்னை

ஸ்ரீரங்கா அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பெற்றன.

 1948. [விலை 12 அணா

# இப்புத்தகத்தில் அடங்கியவை





# முகவுரை

வரங்கொண்ட வுமைமுலைப்பான் மணங்கொண்ட செவ்வாயும்
பரங்கொண்ட களிமயிலும் பன்னிரண்டு கண்மலரும்
சிரங்கொண்ட மறையிறைஞ்சுஞ் சேவடியுஞ் செந்தூரன்
கரங்கொண்ட வேலுமென்றன் கண்ணைவிட்டு நீங்காவே.

திருச்செந்தூர் என்பது முருகப்பிரானுடைய ஆறு படைவீடுகளில் இரண்டாவதாக வைத்து எண்ணப்படும் ஸ்தலம். இது திருநெல்வேலி ஜில்லாவில் கடற்கரையின் கண் உள்ளது. இஃது அலைவாய், கந்தமாதனம், செந்தி, செந்தில், ஜயந்திபுரம் என்றும் வழங்கப்பெறும்.

சங்க காலத்திலேயே இத்தலம் சிறப்புற்றிருந்தமை திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் இதனை ஒரு படை வீடாகக் கொண்டுள்ளமையினாலும், 'அலைவாய்ச் செருமிகு சேஎய்' (அகநானூறு, உசுசு), 'வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில் நெடுவேள்' (புறநானூறு, ருரு) என்னும் தொடர்களாலும் தெரியவருகிறது.

திருமுருகாற்றுப்படையை யன்றி இத்தலத்தைப் பற்றி, திருச்செந்தூர் அகவல், உலா, உலாமடல், கந்தர் கலிவெண்பா, கலம்பகம், கலித்துறை யமகவந்தாதி, கோவை, சிறை வீடந்தாதி, தலபுராணம், இரண்டு நான் மணிமாலைகள், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய நிரோட்டக யமகவந்தாதி, முருகன் பிள்ளைத் தமிழ், பல புலவர்கள் அவ்வப்பொழுது பாடிய பல பதிகங்கள், விருத்தங்கள், தனிப்பாடல்கள் அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரனுபூதி, வகுப்புக்களில் பல பாடல்கள் முதலிய பல உள்ளன. இவற்றுள் சில அச்சானவை.

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள தலவிநாயகரின் திருநாமம் தூண்டுகை விநாயகர் என்பது.

காயத்திரிதேவி முருகப்பிரானைக்குறித்துத் தவம்கிடந்து தன் இருபத்துநான்கு எழுத்துக்களும் இருபத்துநான்கு தீர்த்தங்களாக உற்பவித்துள்ளார் என்று தல புராணம் கூறும். இத்தீர்த்தங்கள்

யாவும் கடற்கரையில் ஆலயத்துக்கு வடக்கும் தெற்குமாக உள்ளன. இவற்றுள் திருச்செந்தூர் நான்மணி மாலையில் வதனாரம்ப தீர்த்தம், கந்தபுஷ்கரணி என்னும் இரண்டும் கூறப்படுகின்றன.

திருமால், பிரமன், காயத்திரி, சரசுவதி, இலக்குமி, திக்பாலகர்கள், ஐராவதம் முதலிய பலர் இத்தலத்திற்கு வந்து வழிபட்டுப் பேறுபெற்றதாக ஸ்தல வரலாறு கூறுகின்றது.

ஸ்ரீகுமரகுருபரர் ஐந்தாம் பிராயம் வரையில் மூங்கையாக இருந்து இத்தலத்தைத் தரிசித்தபின் அது நீங்கப்பெற்று முருகப் பெருமானால் ஆட்கொள்ளப் பெற்றமையைப் பலர் அறிவர். ஆழ்வார்திருநகரியிலிருந்து ஒரு வைணவரிடம் பாடல்கொள்ளவேண்டி முருகன் அவரை விலங்கிட்டுக்கொணர்ந்து பாடச்செய்தார் என்பர். அங்ஙனம் பாடப்பெற்ற நூலே சிறை வீடந்தாதி எனப்படும். வீரபாகுதேவருக்கு முருகக் கடவுள் விசுவரூப தரிசனம் அளித்தது இத்தலம்.

இங்கே நடைபெறும் விழாக்களில் முக்கியமானவை:

(1) சித்திரா பௌர்ணமிக்கு முன்பு ஆறுநாள் சைத்ரோத்ஸவம் நடைபெறும்;

(2) வைகாசி மாதம் விசாகத்துக்கு முன்பு ஆறுநாள் வசந்தோத்ஸவம் மிகவும் சிறப்பாக நடைபெறுகிறது. பக்த கோடிகளின் கூட்டம் அச்சமயம் மிகுதியாக இருக்கும்;

ஐப்பசி சுக்கிலபக்ஷப் பிரதமை முதல் ஷஷ்டி முடிய ஸ்கந்த ஷஷ்டித் திருவிழா நடைபெறும். ஆறாம்நாள் மாலை சூரசங்காரக் காட்சி கடற்கரையில் கண்கொள்ளாதது. ஏழாம் நாள் தெய்வயானையார் திருமணம் நடைபெறும்;

மார்கழியில் திருவாதிரைக்கு முன்பு ஆறுநாள் விடியற்காலையிலும் மாலையிலும் விசேஷ பூஜைகள் நடைபெறும். ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த திருவெம்பாவை முதலியன ஓதப்படும்;

பிரமோத்ஸவம் மாசிமாதத்தில் சுக்கிலபக்ஷ அசுவதியிற் கொடியேறி விழா மகம் முடியப் பத்துநாள் விமரிசையாக நடைபெறுகிறது.

திருச்செந்தூரைப் பற்றிய பிரபந்தங்களுள் இப்புத்தகத்தில் அடங்கியவை வித்துவான் ஸ்ரீ தியாகராச செட்டியார் இயற்றிய திருச்செந்தின் மாலையும், ஸ்ரீ இலக்கணம் கச்சியப்ப முனிவர் இயற்றிய திருச்செந்தூர் நான்மணி மாலையும் ஆகும்.

## திருச்செந்தின் மாலை

திருச்செந்தின் மாலையென்பது திருச்செந்தூரிற் கோயில் கொண்டுள்ள முருகக் கடவுள் விஷயமாக எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தப்பாவில் 'செந்திலம் பதிவளர் குகனே' என்பதை மகுடமாகக் கொண்ட முப்பது செய்யுட்களால் ஆனது. ஒவ்வொரு கவியிலும் முதலிரண்டடிகள் ஆசிரியரின் வேண்டுகோளையோ முருகக் கடவுளின் பெருமையையோ விளக்குவன; பின்னிரண்டடிகளில் செந்தில் வருணனை அமைந்துள்ளது. இந்நூலின் தொடக்கத்தில் விநாயகர், சமயகுரவர் நால்வர், ஸ்ரீ தியாகராச செட்டியாரின் வித்தியா குருவான திரிசிரபுரம் மகா வித்துவான் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் என்பவர்களைப் பற்றிய துதி கவிகள் மூன்றும், அவையடக்கம் ஒன்றுமாக நான்கு வெண்பாக்களும் ஈற்றில் முருகக் கடவுள் விஷயமாக வாழ்த்து ஒன்றும் செட்டியாராலேயே பாடிச் சேர்க்கப் பெற்றுள்ளன.

இந்நூலின கையெழுத்துப் பிரதி ஒன்று எந்தையார் அவர்களால் அரிதாகத் தேடிப் போற்றி வைக்கப்பெற்றிருந்தது. பல இடங்களில் விசாரித்தும் வேறு பிரதி ஒன்றும் கிடைக்கவில்லை. இதன்கண் உள்ள முப்பது செய்யுட்களும் அகராதி வரிசையில் அமைத்துப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. 29-ஆம் செய்யுளின் ஈற்றடி இரண்டும் பிரதி செய்பவரால் விடப்பட்டுள்ளன. அதனால் அச்செய்யுள் உள்ளவாறே பதிப்பிக்கலாயிற்று.

இந்நூலுள் ஆசிரியர் கடலை இந்திரனுக்கும் (4), திருமாலுக்கும் (10), நான்முகனுக்கும் (12), சிவபெருமானுக்கும் (14) உவமையாக்கிச் சிலேடை வகையில் வருணித்திருப்பது பாராட்டற்குரியது. இவர் சிலேடைநயம் தோன்றப் பாடுவதில் வல்லவர். நூல் மிகச் சிறியதாயினும் இதன்கண் நெய்தல் நிலவருணனை அழகாக அமைந்துள்ளது. கடலை வருணிக்கும் பொருளாகக்கொண்டு கூறப்படுவன

பல.நெய்தலின் கருப் பொருளாகிய தாழை (18, 21, 27,) புன்னை (17), பனை (8), பரதவர் அவர்தம் மகளிர் (2, 6, 7, 9, 11, 17, 22, 24, 26, 28) முதலிய வருணனைகள் உத்தமக் கவிகளின் நூல்களில் உள்ளவாறு அழகாக அமைக்கப் பெற்றுள்ளன.

இதனை இயற்றிய ஸ்ரீ தியாகராச செட்டியார் திரிசிரபுரம் மகா வித்துவான் ஸ்ரீமீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் மாணவர். கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் எந்தையாருக்கு முன் பல வருடங்கள் தமிழ் ஆசிரியராக இருந்து புகழ்பெற்றவர். இவருடைய சரித்திரம் எந்தையார் அவர்களால் விரிவாக எழுதிப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

## திருச்செந்தூர் நான்மணிமாலை

வெவ்வேறு வகையான நான்கு மணிகளைத் தொடுத்தமைத்த மாலைபோல நேரிசை வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா என்னும் நான்கும் முறையே தொடர்ந்து அந்தாதியாக அமைய நாற்பது கவிகளால் முடிவது நான்மணிமாலை எனப்படும்.

திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள முருகக் கடவுள் விஷயமாக மண்டில அந்தாதியாக அமைந்த நூல் இது. நான்மணிமாலையில் ஆசிரிய விருத்தமே பயின்று வருவது வழக்காக இருப்பவும் இவ்வாசிரியர் (செய்யுள் 11, 15) கலி விருத்தத்தையும் கூறியுள்ளார்.

வள்ளி தேவசேனையாருடன் முருகன் வீற்றிருக்கும் காட்சியும் (32), புன்னை மரங்கள் எம்பெருமானுக்கு ஆராதனை செய்வதும் (16), செந்திலில் அடியவர் காலங்கழிக்கும் திறனும் (40) சுவையமைந்த வருணனைகளாக உள்ளன. "உன்னைக்குறிஞ்சிக் கிழவன் என்று அழைப்பார் அழைக்க, நான் அலைவாய்க் குமரன் என்பேன்" (4) என்று ஆசிரியர் கூறுமிடம் சிறந்த பாகம். "சிவபெருமான் மனைவியை நீத்து நால்வருக்கு உபதேசம் செய்தனன்; நீயோ இரு மாதரை உடன்கொண்டு குறுமுனிக்குக் குருபரனாக விளங்கினாய்" (8) என்பதும் அப்படியே சிறந்த பகுதியாகும். 'வேசியிற் பொலியும் செந்தில்' (28), 'கஞ்சன்

கந்தாவென்று எத்துதல்' (29), 'கொக்கினை யவிக்கும் குறக்குலக் கன்னி காந்தன்' முதலியன சிலேடைப் பொருளைக் கொண்டன.

இங்ஙனம் இந்நூலிற்காணப்படும் அருமை பெருமைகள் பல.

இந்நூலை இயற்றியவர் இலக்கணம் கச்சியப்ப முனிவர் என்பது மட்டும் இந்நூற் கையெழுத்துப் பிரதியில் வரையப் பெற்றுள்ளது. விசாரித்தவரையில் இவரைப் பற்றிய வரலாறு வேறொன்றும் தெரியவில்லை.

அடையாற்றிலுள்ள எந்தையாரவர்கள் நூல் நிலையத்தில் நூற் பரிசோதகராக இருக்கும் ம-௱-௱-ஸ்ரீ ச. கு. கணபதி ஐயர் B.O.L. அவர்கள் இந்த இரண்டு பிரபந்தங்களுக்கும் குறிப்புரை எழுதி அன்புடன் உதவினார்கள். அவர்கள்பால் எனது நன்றி உரியதாகும்.

ஸ்ரீ ஆதி குமர குருபர சுவாமிகளுடைய தினமாகிய மேமீ 25-ம்உ இம் மாலைகளிரண்டையும் வெளியிடும் பாக்கியம் எனக்கு எய்தியது குறித்து மிகமகிழ்கிறேன்.

திருப்பனந்தாள் காசி மடத்துத் தலைவர்களும் உலகம் போற்றும் மாபெரு வள்ளலுமாகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகளவர்கள் பேரன்புடன் அளித்த நன்கொடையைக் கொண்டே இம்மாலைகள் பதிப்பிக்கப் பெற்றன. அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறேன்.

ஸ்ரீலஸ்ரீ காசி வாசி சுவாமிகளவர்கள் 1944 ஆம்ஆண்டு ஸ்ரீகாசி மடத்துத் தலைமை ஸ்தானத்தை ஏற்றுக் கொண்டார்கள். அதுமுதல் நாளது வரையில் அவர்கள் தமிழ்மொழி, தேவாரத் திருமுறைகள், சைவ சித்தாந்தம், வைத்தியம், ஜீவகாருண்யம், கல்வி முதலியன சம்பந்தமாகப் பல துறைகளில் ஊக்கத்துடன் மனமுவந்து எண்ணி யெண்ணி ஒன்றன்பின் ஒன்றாக அவ்வப்போது ஏற்படுத்தியிருக்கும் பேறக்கட்டளைகள் நாற்பது: அவற்றின் மூலதனம் ஏறக்குறைய ஒன்பது லக்ஷம் ரூபாய் வரையில் இருக்கலாமென்று தெரிகிறது. இதுவரையில் யாருக்கும் கிட்டாத பெரும் புண்ணியம் அவர்களைச் சார்ந்துள்ளதென்றும் பொருளின் பயன் தருமந்தான் என்ற கொள்கையைப் பற்றுக்

கோடாக அவர்கள் கொண்டவர்கள் என்றும் யாவரும் நினைக்கும் படி அவை செய்கின்றன அவர்களுடைய ஒப்புயர்வற்ற அறச் செயல்விவரங்கள் இப்புத்தகத்தை அநுபந்தமாக அலங்கரிக்கின் றன.

அவர்களுடைய திருமேனி ஆரோக்கியத்தையும் தீர்க்காயுளை யும் குறித்து ஸ்ரீ செந்திலாண்டவனை இறைஞ்சுகின்றேன்.

சென்னை,
25-5-1948.

இங்ஙனம்
S. கலியாணசுந்தரம்.



வித்துவான் தியாகராச செட்டியார் இயற்றிய

# திருச்செந்தின் மாலை

## காப்பு

### விநாயகர்

க தேர்மருவும் பேர்வீதிச் செந்தில்வளர் சேவகன்மேல்
ஏர்மருவு மாலைசொல வின்சொற்றரும்-சீர்மலைமன்
மாதங்க வானனத்து மாமணிபோல் வைத்துவக்கும்
மாதங்க வானனத்து மன்.

### சமயகுரவர்

உ சேவுந் தரற்சுட்டுஞ் செம்மணியுங் கன்மிதக்கும்
தேவுமணி நாவலூர் செய்தவமும்-மேவுமருள்
வாதவூ ராரு மறைமுதலும் வைகியொரு
வாதவூ ராமென் மனம்.

---

## குறிப்புரை

## காப்பு

க. சேவகன் - வீரன். மலைமன் - பர்வத ராஜன். மாது அம் கவான் நல் நத்து மாமணிபோல்; மாது - உமையம்மையார். கவான் - தொடை. நல்நத்து மாமணி - நல்ல வலம்புரிச் சங்கு ஈன்ற சிறந்த முத்து. நிறமும் பெருமையும் பற்றி விநாயகர்க்கு முத்து உவமை. மாதங்கம் - யானை. ஆனனத்து - முகத்தையுடைய. மாலை சொல மாதங்க ஆனனத்து மன் இன்சொல் தரும்.

உ. சே உந்து அரன் - காளையைச் செலுத்தும் சிவபெருமான். அரற்சுட்டும் செம்மணி - திருஞானசம்பந்த மூர்த்திநாயனார்; 'தோடுடைய செவியன்' என்ற தேவார முதற் பாசுரத்தில் 'பெம்மா னிவனன்றே' என்று சிவபெருமானைத் தம் தந்தைக்குச் சுட்டிக் காட்டினமையின் இங்ஙனங் கூறினார்; கல் மிதக்கும் தேவு - வாகீசப் பெருமான். நாவலூர் செய்தவம் - சுந்தரமூர்த்தி நாயனார். மறைமுதல் - மணிவாசகப் பெருமான். என்மனம் ஒரு வாத ஊர் ஆம்; ஒருவாத - நீங்காத. நால்வர் இருப்பது பற்றி மனத்தை ஊர் என்றார்.

### ஆசிரியர்

௫ கந்தரத்து நீலங் கரந்துவந்த மீனாட்சி
சுந்தரவா சான்றாட்டு ணைமலரைச்-சிந்தைமகிழ்ந்
துன்னுகவென் கண்களி டுவக்க வணங்கமுடி
துன்னுகவாய் செய்க துதி.

### அவை யடக்கம்

௬ மரகதப்பைந் தோகை மயிலுங் குருகும்
தரமொப்பக் கொண்ட தகைபோல்-வரமிகுந்தோர்
இன்சொல்லுவந்தசெந்தி லெம்பெருமா னேழையேன்
புன்சொல்லுங் கொள்வான் புரிந்து.

### நூல்

1 அணிகொள்செங் கமல மலர்த்தவி சுறையும்
அயனுறழ் தமிழ்முனிக் கருளும்
மணிகொள்வண் புயனின் மலர்ப்பதந் துதிக்கும்
வரமெளி யேற்கருள் புரிவாய்
பிணிகொள வுழக்கு மவுணம காரின்
பேரரு டெரிந்திடுந் திறைபோற்
றிணிகொள்வெண் டரளந் திரைதருங் கடல்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

---

௫ கந்தரம் - கழுத்து. மீனாட்சி சுந்தர வாசான் - திரிசிரபுரம் மகா வித்துவான் ஸ்ரீமீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்கள்; இவர் இந்நூலுடையாரின் ஆசிரியர். மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் தம் கழுத்தின் கறையை மறைத்து ஆசான் வடிவுகொண்டு அவதரித்திருக்கின்றார் என்பது கருத்து. தாள் துணை மலர்; துணை -இரண்டு. 'முடிவணங்கத் துன்னுக' என்று மாற்றுக.

௬ குருகு - சேவல். புரிந்து - விரும்பி. இன்சொல்லுக்கு மயிலும் புன் சொல்லுக்குக் கோழியும் உவமை.

### நூல்

1 தமிழ்முனி - அகத்திய முனிவர்; அகத்திய முனிவருக்கு நான்முகன் உவமை. அவுண மகார் - அசுரரின் பிள்ளைகள். தெரிந்து - அறிந்து. இடும் திறை - சமர்ப்பிக்கும் கப்பம். தரளம்- முத்து. திரை - அலைகள்.

2 அளிமுரா னறிய புதுமலர் தூவி
யன்பினெக் குருகுநல் லடியார்
களியுற மயின்மேற் றோன்றுநின் காட்சி
கடையனே னென்றுகண் டுய்வேன்
மிளிர்நகை கழுத்தாற் பரத்தியர் தமைத்தம்
வெண்டர ளத்தைவென் றமையைத்
தெளிவளை திரையுண் முகஞ்சுரித் தலறுஞ்
செந்திலம் பதிவளர் குகனே.

3 இகழ்வுறு முடைப்பாய்ப் பறிதலைக் கரிய
விருணிற வமண்கிழங் கொழிய
அகழ்தரு புகலிக் கவுணிய மதலாய்
அடியனே னல்லக்கிழங் ககழ்வாய்
புகழ்தமக் குறமா லாமையோ டணிந்தோன்
புதல்வனென் றுனையடைந் தாங்குத்
திகழ்கம டஞ்சேர்ந் திலகுறுங் கடல்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

4 இனமக லவுண மடந்தையர் வயிற்றில்
எரியெழக் கதிரயி லெடுத்த
அனகநின் மலர்த்தாட் புணைபெறா பிறவி
யளக்கரெங் ஙனங்கடந் திடுவார்

---

2 பரத்தியர் - வலைமகளிர். வளை - சங்கு. சங்கு மகளிர் கழுத்துக்கும் சங்கீன்ற முத்து அவர்களின் நகைக்கும் உவமை, நகையினால் தரளத்தையும் கழுத்தால் தமையும் வென்றமையை : எதிர் நிரனிறை. 'வளையலறும்' என்பது தொனி.

3 புகலி - சீகாழி. 'கவுணிய மதலாய்' என்றது திருஞான சம்பந்த மூர்த்தியை. மால் ஆமை ஓடு - திருமாலாகிய ஆமையின் ஓட்டை. அணிந்தவர் சிவபெருமான். கமடம் - ஆமை. கமடம் தமக்குப் புகழுற உனை அடைந்தாங்குச் சேர்ந்து இலகுறும் கடல்.

4 இனம் அகல் : பெருங் கூட்டத்தவரான என்றபடி அவுண மடந்தையர்......அனகன்: 'அறங்குலவு மகத்தழலு மவுண மட வார்வயிற்றி னழலு மூள. மறங்குலவு வேலெடுத்த குமரவேள்' (திருவிளை. கடவுள்.) புணை-தெப்பம். தாளே புணை: 'பிறவிப்

கனமுறத் தாங்கிச் சசிதழீச் செறியுங்
கண்மலர் மருவிவெற் படக்கிச்
சினமுறு குலிசா யுதனிகர் கடல்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

5 உரைதரு கல்வி சான்றமா முனிவர்
உளங்கனிந் தோதின வன்றிக்
கரைதரு கல்வி சான்றிடா வெனபுன்
கவியுநின் செவிக்கினி தாமோ
புரைதபு நின்னைப் போற்றுவார்க் களித்தல்
புண்ணிய மெனவுணர்ந் தாங்குத்
திரைதுகிர் தரள மடியர்கைச் செறிக்குஞ்
செந்திலம் பதிவளர் குகனே.

6 உலகுயி ரனைத்தும் படைத்துமீட் டளித்தும்
ஒடுக்குநின் புகழ்பர வாதார்
பலகலை கற்றும் பிதற்றியு மென்ன
பயன்பெறு வார்கொலோ வுணரேன்
கலகவாள் விழிகட் கெதிரெனப் பிறழ்மீன்
கணங்களைப் பிடிக்கவன் றிமிலர்
திலகவா ணுதலா ருணக்குறுங் கரைசேர்
செந்திலம் பதிவளர் குகனே.

---

பெருங்கட னீந்துவர் நீந்தார், இறைவ னடிசேரா தார்' (குறள்,10.) பின்னிரண்டடிகள் கடலுக்கும் இந்திரனுக்கும் சிலேடை: கனம் உறத் தாங்கி - மேகம் தன்னை அடைய அதனை ஆதரித்து (மேகத்தால் தாங்கப் பெற்று; மேகம் வாகனம்.) சசி தழீஇ - சந்திரனை நட்புக் கொண்டு (இந்திராணியைத் தழுவி.) செறியும் கண்மலர் - நெருங்கிய கள்ளையுடைய மலர்களை (நெருங்கிய கண்களாகிய மலர்களை.) வெற்பு அடக்கி-மைநாக மலையைத் தன்னுள் அடக்கிக் கொண்டு (மலைகளின் சிறகையரிந்து அவற்றைக் கண்டித்து.) குலிசம் - வச்சிராயுதம்.

5 சான்றிடா - பெருமை பெறாத. புரை தபு - குற்றமற்ற. அளித்தல் - கொடுத்தல்.

6 ஒடுக்கும் - அழிக்கும். எதிர் - ஒப்பு. திமிலர் - பரதவர். உணக்குறும் - உலர்த்தும்.

7 கங்கண வுரகக் கடவுடன் மதலாய்
காமர்நின் சீர்புக ழடியார்
தங்கணந் தழுவி யவர்பணி புரியத்
தண்ணருள் புரிந்தினி தருள்வாய்
அங்கணோர் கயலை வலையிடைப் படுக்கு
மடற்பர தரைப்பரத் தியர்தஞ்
செங்கணும் வலையிற் படுக்கும்பாக் கஞ்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

8 கண்புனை நெற்றிக் கடவுடன் புதல்வா
கருதிவான வர்தொழு முதல்வா
வண்புகழ் முருகா மாற்குநன் மருகா
வல்வினை யேற்கருள் புரிவாய்
சண்பைவந் தாண்பெண் ணாக்கித்தம் மினக்குத்
தருபுகழ் தருநிற்சார்ந் தாங்குத்
திண்பனை யனைத்துஞ் செறிகடற் கரைசேர்
செந்திலம் பதிவளர் குகனே.

9 கம்பமா லசுரக் களிற்றினைக் கடிந்த
களிற்றுடன் வருமிளங் களிறே
செம்பொரு ளுணர்ந்தோ ருளத்தொளிர் மணியே
சிறியனேன் மலவிரு ளொழிப்பாய்
வம்பவிழ் குழலார் வாயிதழ்க் கொப்பு
வலைஞர்நோக் குறச்சிறு குடின்மேற்

---

7 கங்கண உரகக் கடவுள் - பாம்பைக் கங்கணமாக வுடைய சிவபெருமான். காமர் - அழகு. பாக்கம் - கடற்கரைச் சேரி.

8 மாற்கு - திருமாலுக்கு. சண்பை - சீகாழி. தம் இனக்கு- தம் இனத்திற்கு. திருஞான சம்பந்தர் ஆண் பனையைப் பெண் பனையாக்கியதை முருகன் செயலாகக் கூறியது. ஆளுடைய பிள்ளையார் முருகனுடைய அவதாரம் என்பது நோக்கி.

9 கம்பம் - அசைவு. அசுரக்களிறு - கசமுகாசுரன். கடிந்த களிறு - விநாயகர். செம்பொருள் - வீட்டுக்கு நிமித்த காரணமாகிய

செம்பவ ளந்தாய்ப் படரும்பாக் கஞ்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

10 கலம்புனை கொங்கைக் குறத்திநா யகநின்
கவின்றரு மலரடிப் புகழை
நலம்புனைந் துரைத்து நாத்தழும் பேற
நாயினேற் கினிதருள் புரிவாய்
வலம்புரி யேந்தி மணிக்கலன் றுங்கி
மலர்தரு மாமணம் புணர்ந்து
சிலம்பெடுத் துயர்மா லுறழ்தரு கடல்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

11 கலைமதி வதனக் குறமகள் கொங்கைக்
களிநல்யா னைகள்விளை யாடும்
மலையென வளர்திண் புயமுடைக் காளாய்
வல்வினை யேற்கருள் புரிவாய்
வலைஞர்நே மிப்பு ளெக்கித்தம் மடவார்
வனமுலை நோக்குறு தலுமச்
சிலைநுதன் மடவார் நாணுறங் கானற்
செந்திலம் பதிவளர் குகனே.

---

செவ்விய பொருள்' (குறள்,358, பரி.) வம்புஅவிழ் - மணம் வீசுகின்ற.

10 பின்னிரண்டடிகள் கடலுக்கும் திருமாலுக்கும் சிலேடை. வலம்புரி - சங்குகள் (பாஞ்ச சனியம்.) மணிக்கலன் - மணிகளாகிய அணி; ரத்நாகரம் என்பது கடலுக்கு ஒரு பெயர் (கவுத்துவ மணியாகிய ஓர் அணி.) மலர் தரு மாமணம் - கரையிலே உள்ள புன்னை, தாழை முதலிய மலர் தருகின்ற சிறந்த நறுமணத்தை (தாமரையீன்ற இலக்குமியின் திருமணத்தை.) சிலம்பு எடுத்து - ஓசையைப் பெருக்கி (கோவர்த்தன மலையை உயர்த்தி.)

11 முலைகளுக்கு யானைகள் உவமை. நேமிப்புள் - சக்கரவாகப் பறவைகள்; இவை முலைகளுக்கு உவமை. வனம் - அழகு. கானல் - கடற்கரைச் சோலை.

12 காரதி கருமை யென்றிடா வண்ணங்
கறுத்துநெய்த் திருங்கடை குழன்று
தாரதி லியைந்த குழற்குறக் கொடிதோள்
தழுவுநா யகவெனை யாள்வாய்
பாரதி நாவாய் சுமந்தல ரேந்திப்
பகர்திசை முகமரீஇ விளங்கும்
சீரதி கஞ்சார்ந் தயனேர் கடல்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

13 கூர்ந்தபே ரன்பி னிடையறா துருகிக்
கொடும்பவப் பிணிதெற மெலிந்து
சார்ந்தவர்க் காக்குந் தயாநிதி மதியாத்
தமியனேற் புரத்தனின் கடனே
வார்ந்தமா கடனின் பிதாவுண விடமென்
மடமையா லளித்தன னதனைத்
தேர்ந்தகங் கொள்ளே லென்றல்போ லிரங்குஞ்
செந்திலம் பதிவளர் குகனே.

14 சதிமுறை தவறா வரம்பையர் நடனஞ்
சதமக னேக்கிநல் வரன
மதியயி ராணி வனமுலை தழுவி
வாழ்வதுன் னருளினு லன்றோ

12 கார் - மேகம். அதி கருமை - மிகுந்த கரிய நிறத்தது. அதில் தார் இயைந்த - அக் கூந்தலில் மாலை பொருந்திய. பின்னிரண்டடிகள் நான்முகனுக்கும் கடலுக்குஞ் சிலேடை. பாரதி நாவாய் சுமந்து - தோணி என்னும் கப்பலைத் தாங்கி; பாரதி - தோணி ; சரசுவதியை நாவினிடம் தாங்கி; அலர் ஏந்தி—மலர்களைத் தன்னிடத்தே பொருந்தி; தாமரையினல் ஏந்தப் பெற்று. திசை முகம் மரீஇ - திசைகள் தோறும் இடம் அகன்று (நான்கு திசைகளுக்கும் நான்கு முகங்களைப் பெற்று; திசைமுகன் என்பது பிரமாவுக்குரிய ஒரு பெயர்) சீர் அதிகம் சார்ந்து. •

13 புரத்தல் நின். வார்ந்த - நீண்ட.

14 சதி - தாள வொத்து; 'பதங்களிற் றண்ணுமை பாணி பண்ணுற, விதங்களின் விதிமுறை சதிமி திப்பவர்' (கம்ப. நகரப். 52); "தாளினைப் பெயர்த்து முன்னஞ் சதிமுறை பிறழா தாட"

நதிபதி யாய்த்தண் ணம்புலி வாய்ந்து
நச்சர வம்புனைந் தாங்குத்
திதிபுரிந் தாடுஞ் சிவனிகர் கடல்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

15 தண்டரு மலர்கொண் டருச்சியேன் சிகரத்
தளிவலஞ் சூழ்ந்திலேன் றமேழன்
பண்டரு மொழியாற் பரவிலே னின்பொற்
பதமலர்க் கன்புற லென்றே
கண்டரு முடனின் மாமனூர் வதெனக்
கடனிலைந் துவபொரீஇ முகிற்குத்
தெண்டிரை நெய்தற் றேனளா யூட்டுஞ்
செந்திலம் பதிவளர் குகனே.

16 தருநிழற் பிறந்த குமுதவாய்க் கருங்கட்
டையன்மென் றடமுலை ஞெமுங்க
மருவுதிண் டடந்தோள் வள்ளனின் னருளை
மருவுறு ரெங்ஙனுய் வார்சார்
தருகருங் கணல்சங் கேந்திவீழ்ந் தெழுந்து
தழங்கல்சூர்க் கஞ்சிநிற் பணிந்து

(கூர்ம. திருக்கல். 56.) சதமகன் - இந்திரன். பின்னிரண் டடிகள் சிவபெருமானுக்கும் கடலுக்கும் சிலேடை. நதிபதியாய்: கடலை ஆறுகளுக்குக்கணவன் என்றல் மரபு; கங்கா நதியின் கணவனாகி. அம்புலி-சந்திரன். நச்சு அரவம் புனைந்து - காதலரோடு கூடினார் விரும்புகின்ற தசையை அலங்காரமாகப் பெற்று (நஞ்சோடு கூடிய பாம்புகளை அணிந்து.) ஆக்கி - படைத்து. திதி புரிந்து - காத்தலைச் செய்து. ஆடும் - அழிக்கும்; நடனம் செய்யும்.

15 தண்தரு - குளிர்ந்த மரங்கள். சிகரத்தளி - கோபுரத்தை யுடைய கோயில். பண்தரு மொழியால் - இனிய இசைப் பாட்டுக் களால். கண்தரும் உடல் நின் மாமன் - உடல் முழுதும் கண்களைப் பெற்ற உன் மாமனாகிய இந்திரன். எனக் கடல் நினைந்து ஒரீஇ தேனளாய் முகிற்கு ஊட்டும்.

16 தருநிழல் - கற்பக நிழலின் கண்; என்றது தேவருலகில். தையல் - தெய்வயானையார். திரு நிறன் - இலக்குமியை மார்பி

திருநிற வொழுந்து முறையிடல் கடுக்குஞ்
செந்திலம் பதிவளர் குகனே.

17 தான வருடல்போழ்ந் தூனொடு பழகித்
தடிசுவைத் துதிரம்வாய்ப் பில்கு
மானவே லேந்தும் வானவ வெளியேன்
வல்வினை போழ்ந்தினி தருள்வாய்
பானலங் கருங்கட் பரத்தியர் தரளப்
பருமணி யென்றுக மயங்கத்
தேனலர் புன்னை யரும்புகுங் கானற்
செந்திலம் பதிவளர் குகனே.

18 நறியபூங் கடப்ப மாலைதாழ் புயநின்
னளினமா மலர்ப்பத மன்றி
வறியபுன் சுரரைப் பொருளென மதித்தென்
வாய்துதி யாதெந்த ஞான்றும்
பறிநிகர் சடிலற் பிழைத்ததோந் தீரப்
பரவுநின் னருள்பெறு பாக்குச்
செறிமடற் கைதை யடைந்தெனச் சூழுஞ்
செந்திலம் பதிவளர் குகனே.

---

னுடைய திருமால். சங்கோடு கூடிய நீல அலை பாஞ்சசன்னிய மென்ற சங்கோடு கூடிய திருமாலுக்கு உவமை.

17 தடி - தசை. தானவர் உடல் போழ்ந்த வேலையுடைய வருக்கு வல்வினை போழ்தல் எளிது என்றபடி. பானல் - கருங்கு வளை. புன்னை அரும்புகளுக்கு முத்து உவமை.

18 பறிநிகர் சடிலர் - ஏற்ற மிறைக்கும் பறியைக் கவிழ்த்து வைத்தாற் போன்ற சடாமுடியை யுடையவர்; என்றது சிவபெருமானை. கங்கையின் ஒழுக்கினாலும் வடிவினாலும் சடைக்குப் பறி உவமை பிழைத்ததோம் - தவறிழைத்த குற்றம். பெறுபாக்கு- பெறுவதற்காக; பாக்கு: வினையெச்ச விகுதி. கைதை - தாழை. சிவபெருமானது முடிதேடச் சென்ற நான்முகற்குச் சார்பாகத் தாழை மலர் பொய்க்கரி புகன்று தவறிழைத்தது.

19 நறுமணங் கமழ்ந்து புரிமுருக் குடைந்து
நறவுகா றருகடம் பணியல்
சிறுகடைக் குறத்தி விழியளி மொய்ப்பத்
திண்புய மணிந்தவ வருள்வாய்
குறுமுனி தனைமுன் குடித்ததோர்ந் தினுந்தற்
குடித்திடா வணமவன் பாசம்
தெறுநின்கோ யிலின்முன் சார்ந்தெனக் கடல்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

20 நன்னய முணர்ந்தோ ருளமலர்த் தேனே
நாச்சுவை யாச்சுவைக் கரும்பே
பன்னரும் பாகே யமுதமே யெனநிற்
பரவுவார்ப் பரவவா னருள்வாய்
தன்னிடைப் பிறந்த வுமைசுத னெனநிற்
சார்ந்துநின் றழைத்தல்போ லளக்கர்
தென்னுறு திரைக்கை யேந்திநின் றிரங்குஞ்
செந்திலம் பதிவளர் குகனே.

21 நீர்தரு வேணிப் பெருந்தகைப் புயத்தும்
நீடுநான் மறைமுடி யிடத்தும்
கார்தரு கூந்த லுமைமடித் தலத்துங்
கமழ்மலர்ப் பதந்தொழ வருள்வாய்
சார்தரு மளக்கர் வெம்புலா லொருவத்
தழைமடற் கேதகை மணந்து
சேர்தரு மன்ற றிசைக்கெலாம் வீசும்
செந்திலம் பதிவளர் குகனே.

---

19 அணியல் - மாலையை. குறுமுனி - அகத்தியர்; அகத்தியர் கடலைக்குடித்தது இந்திரனுக்காக; திருவிளை. இந்திரன் பழி.

20 நிற் பரவுவார்ப் பரவ-உன்னை வணங்கும் அடியார்களை வணங்க. சரவணப் பொய்கையைக் கடலெனக் கொண்டு, 'தன்னிடைப் பிறந்த' என்றார். தன்னிடை-நீரினிடத்து; அதாவது சரவணப் பொய்கையில். தென்னுறு - அழகு பொருந்திய.

21 அளக்கர் - கடல். ஒருவ - நீங்க. கேதகை - தாழை. கடல் புலான் மணம் அலர் மலர் மணத்தல்: 'கயற் புலால் புன்னை கடியும் பொருகடற் றண்சேர்ப்ப' (நாலடி. 97.)

22 பங்கயத் தவிசோன் பதமும்பைந் துளவப்
படலையோன் பதமுநல் லுடல
வங்கணன் பதமு நின்பதந் துதிக்கு
மடியவர் பெறும்பத மன்றோ
தங்கனி மொழியார் விழிநிழ லறலிற்
சார்ந்திட நோக்கிவன் றிமிலர்
செங்கய லென்று வலைஎறி கடல்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

23 பண்கவர் மொழிச்சூர்க் களிற்றொடு குறவர்
பயிறரு வரைச்சிறு மானும்
கண்கவர் வனப்பைக் கண்டுகண் டுவக்குங்
காளைநின் னருள் டருவாய்
வண்கலை சோர மகிழ்நரைத் தணந்து
வருந்துவோர்க் கிரங்குபு வாரி
தெண்புனற் றிவலை தூயினி தளிக்குஞ்
செந்திலம் பதிவளர் குகனே.

24 பண்புனை பாவாற் பரவுறு மடியார்
பவப்பிணி தொலைக்குநன் மருந்தே
விண்புனை மணியே தண்புனை கமல
மென்பதம் பரவுமா றருள்வாய்

---

22 படலை - மாலை. உடல அங்கணன் - இந்திரன். நின் பதம் - உன் பாதங்களை.

23 சூர்களிறு - தெய்வயானையம்மையார்; இங்கே களிறு என்பது யானை என்னும் பொருட்டாய் நின்றது.

"தெய்வக் களிற்றைமணஞ் செய்தோனே" (கந்தர் கலி. 105.); "குமரநாயகன் களிற்றொடும் கூடி." (கந்த. தெய்வயானையம்மை, 260.) 'களிற்றொடுமானைக் கண்டு உவக்கும் காளை' என்றது நயம். கலை- ஆடை. மகிழ்நர்-கணவர். தணந்து - பிரிந்து. நெய்தல் இரங்கல் ஆதல் பற்றி இங்ஙனம் கூறினர்.

24 விண் புனை மணி-விண்ணை அலங்கரிக்கும் சிந்தாமணி; சூரிடமிருந்து மீட்டு விண்ணைப் புனைந்த மணி போன்றவர்

நண்புடை மடவா ரல்குலேத் தெரிக்கும்
நற்கமட டப்புறங் கண்டு
திண்புயத் திமிலர் மயங்குறுங் கடல்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

25 பந்துறழ் முலேவாட் கருங்கணூர் மயலிற்
பட்டுழ லடியனேன் முன்னம்
வந்துநின் வனச மலர்ப்பதத் தன்பு
வருவிப்ப தென்றுகொ லறியேன்
நந்துவல் லவுணர்க் காய்ந்திடு நினது
நற்பிர தாபம்போன் மெனச்சீர்ச்
செந்துவர் நெருங்கி யிலகுறுங் கடல்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

26 பாலன மொழியார் பாலன வரதம்
பரிந்துழன் றுள்ளக மயங்கும்
சீலமி லெளியேன் சீலமுற் றென்றுன்
சீரடி யார்பணி புரிவேன்
கோலவன் றிமிலர் வலேப்படு மீனுட்
குவிமுலே யார்விழி காட்டும்
சேலொழித் தேனே மீன்கொளுந் கடல்சேர்
செந்திலம் பதிவளர் குகனே.

27 மறைமுதற் கலேக ளனேத்தினு நினேயே
வான்பர மென்றெடுத் தியம்ப
அறைதரு சிலரைப் பரமென்ப ரந்தோ
வடைதரு பெரும்பய னெவனே

---

என்னலுமாம். அல்குல் - பின்தட்டு; இதற்கு ஆமையின் முதுகு உவமை.

25 முலேகளுக்குப் பந்து உவமை. நந்து - அழிகின்ற. காய்தல் - சினத்தல். செந்துவர் - பவளம். சினத்தின் நிறம் செம்மை என்பவாகலின் அதற்குப் பவளம் உவமையாயிற்று.

26 பால் அன - பாலேப் போன்ற. அனவரதம் - எப்பொழுதும்.

நறைகமழ் கைதை சூழ்கழி நெய்த
னறுமலர்த் தேனுவட் டெறியச்
சிறையளி பருகிச் செவ்வழி பயிலுஞ்
செந்திலம் பதிவளர் குகனே.

28 வாங்குவிற் புருவம் வளகநல் வதன
மணிநகை முருந்துமென் முலைகள்
கோங்கென மாதர்ப் புகழ்ந்துழ லாதுன்
குரைகழல் புகழுமா றருள்வாய்
மாங்குயிற் குதலைப் பரதவர் மகளிர்
வண்டல ளத்திடல் வகுத்த
தேங்கொளிச் சிற்றி லலையெழுந் தலைக்குஞ்
செந்திலம் பதிவளர் குகனே.

29 *விட்பகை யவுணர்க் கடிந்தம ரரையவ்
விண்குடி யேற்றிவேய்ங் குழலின்
பட்பகை மொழிச்சூர்க் களிற்றினை மணந்த
பரமவெற் கினிதருள் புரிவாய்

* * * *

---

* இதன் பின்னிரண்டடிகள் கிடைக்கவில்லை.

27 கலைகள் இயம்ப. அளி - வண்டுகள். செவ்வழி: ஒரு பண்.

28 வாங்கு வில் - வளைந்த வில். முருந்து - மயிலினிற கடிக்குருத்து; இது பற்களுக்கு உவமை. "முருந்துறழ் மூரலார்" (நைடதம்.) கோங்கு - கோங்கின் மொட்டு; கோங்கு - ஒரு மரவி சேடம்; "கோங்கரும் பன்ன முலையாய்" (நாலடி. 400.) மாதர்ப் புகழ்ந்து - மாதரைப் புகழ்ந்து.

29 விண் பகை. பண் பகை. சூர்க்களிறு - தெய்வ யானை.

30 வெண்ணிலா முடித்த கண்ணுதற் பரம
வித்தகன் வாமமுற் றிருக்கும்
பண்ணிலா வுறுமென் மொழியுமை பயந்த
பாலவெற் கின்னருள் புரிவாய்
கண்ணிலாச் சூரைக் கடிந்துவிண் ணுலகங்
காத்தநின் புகழென வொளிசெய்
தெண்ணிலாத் தரளங் கொழித்திடுந் திரைசேர்
செந்திலம் பதிவளர் குகனே.

திருச்செந்தின்மாலை முற்றும்.

## வாழ்த்து

குருவளர்நன் முகமாறு மருள்மொழிபன்
னிருவிழியுங் குலவு நீப
மருவளர்திண் புயமுமணி மார்புமெழின்
மலர்க்கரமு மயிலு வேலும்
செருவளர்கட் குறமான்றெய் வப்பிடிவாழ்
பாகமும்பொற் சிலம்பு கொஞ்சும்
திருவளர்செந் தூர்முருகன் றிருவடித்தா
மரையுமுளஞ் சேர்த்து வோமே.

---

30 பண் ணிலாவுறும் - இசை பொருந்தி யமைந்த. பால: விளி. கண்-அருள்; தாட்சிணியம். சூர் - சூரபன்மன். புகழின் நிறம் வெண்மை யாதல் பற்றி அதற்கு முத்துக்கள் உவமை.

வாழ்த்து

குருவளர் - செவ்வொளி படர்ந்த; பெருமை பொருந்தி என்னலுமாம். நீப மரு - கடப்ப மலரின் மணம். செருவளர் கண்ய இது கேசாதிபாத வருணனை.

உ

செந்திலாண்டவன் துணை

இலக்கணம் கச்சியப்ப முனிவர் இயற்றிய

# திருச்செந்தூர் நான்மணிமாலை

## காப்பு

### வெண்பா

நந்துலவுஞ் செந்திலான் நான்மணிமா லைத்தொடைக்குப்
பந்தவனம் பாற்றவருட் பார்வைதொறும்-சிந்துமெரி
மேன்மேற் கிளைப்பச் செவிவிசிறி வீசிவரும்
கான்மே விருங்கடத்தான் காப்பு.

## நூல்

### (வெண்பா)

1 புவியளிக்கும் புத்தேளும் பூங்கமலத் தேவும்
பவமறிக்க நின்றிருமுன் பன்னாள்—தவமியற்றும்
செந்திலா யென்னைநனி சேர்ந்தருள விவ்வரையும்
வந்திலா யென்னையினி வா.

---

**காப்பு**

நந்து-சங்குகள். பந்தவனம்-பாசங்களாகிய காடு. பாற்றுதல்-அழித்தல்; 'பணிந்தாரன பாவங்கள் பாற்றவல்லீர்' (தே.) கால் மேவு; கால்-காற்று. வனத்தை யழிக்கக் கண் சிந்தும் எரி மேலும் மேலும் கிளைக்கும்படிச் செவி வீசிவரும் காற்றையுடைய விநாயகர். எரி வனத்தை அழித்தல் இயல்பு. விநாயகருடைய செவிகளின் காற்று: 'கார்கொண்ட கவுண்மதக் கடைவெள்ள முங்கட்கடைக் கடைக் கனலு மெல்லை கடவாது தடவுக் குழைச்செவி முகந்தெறி கடைக்கா றிரட்ட' (மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்.1.) தொடைக்கு இருங்கடத்தான் காப்பு.

**நூல்**

1. பவம்-பிறவி. இவ்வரையும்-இதுகாறும்.

(கட்டளைக் கலித்துறை)

2 வாங்கிய தண்கட லேழுங் கலங்கி மறுகினும்பூத்
தாங்கிய மேரு தளர்ந்துநொந் தேங்கினுந்தாரகையோ
டுங்கெழுஞ் சூரிய னாலோ னுதிரினு மோங்குசெந்தில்
ஆங்கிருந் தானடிப் போதடி யேன்றனக் காதரவே.

(ஆசிரிய விருத்தம்)

3 ஆதவ னெழுத லோடு மடரிருட் படலங்கீறிச்
சீதவம் புயம்வாய் விண்டதெனச்சிறு வரையானாலும்
ஓதம்வந் துலவு செந்தி லொருதிரு முருகற் காணிற்
காதர மிரிந்து மாயக் களித்தகம் பூக்கு மாதோ.

(ஆசிரியப்பா)

4 பூமலி நறுந்தேன் வாய்மடுத் தளிக்குலம்
இசைப்பாண் மிழற்றும் நசைப்பா சடைத்தலைக்

---

2. பூ-பூமி. ஆலோன்-சந்திரன். செந்தில் ஊழியினும் அழியாதது என்பது கருத்து.

3. ஓதம்-கடல். காதரம்-அச்சம். அம்புயம் வாய் விண்டதென அகம் பூக்கும்.

4. (1) அளிக்குலம்-வண்டினம். (2) நசை-விருப்பம். (5) மோலியர்-முடியையுடைய தேவர். (6) நிலீஇ-நின்று. (10) குஞ்சரம், (11) காளை, (12) பருதி, (13) தனிமுதல்: இவை விளி. (15) உம்பரை-மேலுலகத்தை. (16) ஆண்டலை-சேவல். அகன் கறையை வாயில் என வெண்ணி. குடம்பை-கூடு. (16-17) ஆண்டலை மீண்டிருக்கும் கரத்தோய் (21) சேகரம்-தலை என்றபடி. செச்சை-வெட்சி. (24) ஞெமிரிய கோபம்-பரந்த இந்திரகோபப் பூச்சி. (24-5) கோபம் உறழச் சிதறின ஒளிர. அடுக்கலிற் கிழவன்-குறிஞ்சிக் கிழவன் என்றபடி; அடுக்கல்-மலைத்தொடர்: (30) பூவை-காயாம்பூ. (29-31) எதிர் நிரனிறை. (32) ஒருத்தன்-சிவபெருமான். (33) அவ்வொருத்தனுடைய செவி நிறைய. 'கிழவனென்று பிறர் கூற யாம் குமரனென்று சொல்லுவோம்' என்பது நயம்; "திருந்தப் புவனங்க ளீன்றபொற் பாவை திருமுலைப் பாலருந்தி...............விம்மியழுங் குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென் றோதுங் குவலயமே" (கந்தரலங்காரம், 5.)

கருஞ்சிறை யொடுக்கி யிருஞ்சினைத் துயிற்றும்
வான்றருப் புன்னையில் வளைஇ யமர்தரப்
பொன்னிலம் பொலிந்த வின்மலி மோலியர்
நிரைநிரை நிலீஇ முறைமுறை வணங்க
நவமணி குயிற்றிய வயிரொளித் தவிசின்
மீமிசைச் சிவனுந் தேவர்கள் தேவன்
மடிமிசைத் தவழ்ந்து வளருந் தெய்வ
யானையை மணந்த வேர்தரு குஞ்சரம்
கட்புலன் கதுவாக் கவின்பெறுங் காளை
உட்டுக ளறுக்கு முருகெழு பருதி
ஆரண மறியாப் பூரணத் தனிமுதல்
உம்பருக் கீத்துண வுறழ்தரப் புனன்மொண்
டும்பரைப் பார்த்துணு மொளிர்செழுஞ் சூட்டின்
ஆண்டலை மதியத் தகன்கறைக் குடம்பையின்
நுழைவழி வாயி லெனவதி னுழையப்
பறந்துமீண் டிருக்கும் பங்கயக் கரத்தோய்
கானகம் படர்ந்து கதிர்நிலா முறுவல்
மானகத் துதித்த வள்ளிதன் பதத்திற்
சேகர முடித்த செச்சையி னறும்பூ
இருள்படத் துவன்றி யெழின்மலர் நறுந்தேன்
சொரிதறண் டாத சோலையி னகத்துக்
கருவிமா மழையின் ஞெமிரிய கோபம்
உறழவாண் டாண்டுச் சிதறின வொளிர
வீழ்ந்திரந் தெழூஉம் வேங்கையஞ் சாரல்
அடுக்கலின் கிழவனென் றையநின் றனையே
அனுதின மோவா தறையுநர் நிற்க
தாமரைத் தவிசிற் சதுமுகத் தோனும்
பூவைபோன் றிலங்கும் புதுநிறத் தோனும்
பூதலம் பிளந்து வானுற நிமிர்ந்தும்
அடிமுடி யறியா வழகிய வொருத்தன்
தலைநனி வணங்கத் தனிச்செவி நிறைய
மந்திர மறைந்து மகிழ்ந்துவீற் றிருக்கும்

5 ஆலவாய்க் குமரனென் றறைகுது மெமக்குப்
பரிசுநின் னிருதாட் பங்கயம்
கருணையி னளித்துக் காக்குமக் கடனே.

### வெண்பா

கடலருகு வாய்த்த கரும்பேகண் டோர்தம்
மடமறுக்கு ஞான வடிவே—இடமகன்ற
ஏரலைவா யாவென்றே யேத்தவவன் சேவடியின்
சீரலைவீர்ந் தீருந் திரு.

### கட்டளைக் கலித்துறை

6 திருவளர் தாரகை நாயகனேதென்ற லேகடலே
உருவிலி மாலையும் போதே யிவற்று ளொன்றேயமையும்
பருவரு மாறிவை யெல்லாம் பகைத்தவா லென் செய்குவேன்
தருகநின் னருளினிச் செந்தூ ரிருந்தருள் சண்முகனே

### ஆசிரிய விருத்தம்

7 முகத்தினி லிலங்கு திலகம்வேள் பொடியாம்
முளரிவாள் விழிபொர வடியார்
அகத்தினி லிலங்கு முமாபதி யெனக்கண்
டடியிணை போற்றுழி யுரத்தின்

---

5. கடலருகு வாய்த்த கரும்பு: இவ்வடி, 'கண்டங்கரிதாய்... ......கரும்பு' என்று பட்டினத்தார் பாடிய செய்யுளை நினைப்பிக்கின்றது. ஏர்-எழுச்சி. சேவடியின் சீர்: எழுவாய். அலைவு ஈர்த்து இருமை ஈயும்.

6. தாரகை நாயகன்-சந்திரன். உருவிலி-மன்மதன்; உருவிலி என்பதற்கும் எண்ணேகாரம் கூட்டியுரைக்க. ஒன்றே அமையும்-வருத்துவதற்கு ஒன்றேதகும். பருவருமாறு-யான் துன்பமடையும்படி. இது தலைவி கூற்று.

7. திலகம் சிந்தூரத்திலகம். முளரி-தீ. விழி-நெற்றிக்கண்.

நகைத்தலை மாலை காண்கிலா மையினால்
நமசிர மிறுமெனப் புரப்போர்
சகத்தினைப் படைப்போ ரழுங்குசெந் தூரிற்
சண்முகா சரணளித் தருளே.

## ஆசிரியப்பா

8 அருணணி சுரக்குங் குருமனை பிடித்த
தூங்கிருள் சீக்குந் துலங்கொளிப் பலகதிர்ச்
சுதைநிலாக் குளிர்மதித் தோன்றலை யெரிபுரை
வட்டவார் சடையெனு மதிலுயர் புரிசை
உட்பட விருத்தி யுருத்தெழு கருவிடம்
உவட்டெடுத் தொழுகு முட்டுளை யெயிற்றுக்
கட்செவி யருகிற் காவலா நிறீஇய
தெனமுடி வயங்க விறைமை வீற்றிருந்
துலகொரு மூன்று மொருங்கர சியற்றி
எவ்வெவர் நன்மையு மெவ்வெவர் தீமையும்
மந்திர முதல வந்திறத் தினர்கள்
ஒருவரு மின்றி யுற்றவக் கணமே
அவ்வுழி யவ்வுழி யவரவ ராய்நின்
றிவ்வகை தெரியா வின்பமுந் துன்பமும்
அன்னோர்க் கவனவ னதுவென வுதவும்

---

பொடியாம் - பொடியாவதற்குக்காரணமான. பொர-ஒப்பாகத் தோன்ற. கண்டு - முருகனைத் தரிசித்து. புரப்போர் என்றும் படைப்போர் என்றும் பன்மையாற் கூறியது, மாலைக் குரிய பல பிரம விட்டுணுக்களை என்க.

8. குரு-வியாழபகவான். பிடித்த-முறையின்றிப் பற்றிய. (2) சீக்கும்-அழிக்கின்ற. (7) நிறீஇய-நிறுவிய. (8) முடி வயங்க-முடியானது விளங்க. (16) புங்கவன்-சிவபெருமான். (17) நால்வர்க்கு-சனகாதி முனிவர் நால்வருக்கு. (18-9) குழலியை நீத்து உணர்த்தினன்-உமாதேவியைப் பிரிந்து வந்து தனியே இருந்து உணர்த்தினன். (21) இருவரும்-வள்ளி தேவ

பொன்னிகர் திருவுருப் புங்கவன் றானும்
ஆலநிழ னால்வர்க் கறமுத னான்கும்
அருளிய ஞான்று மருமலி குழலியை
நீத்தன் றுணர்த்தின னீண்டருட் குடிகொண்
டுற்றிருந் தோடு நாற்றமன் மதுமலர்
தழீஇய கூந்தற் றையலா ரிருவரும்
உடனகத் தமர வும்பரி னெடுந்தேர்
எழுபரி நடாத்து மழகிய செல்வனும்
உவாத்தொறு நிறையுந் தவாப் புகழ்க் கடவுளும்
அலமர வுயர்ந்த குலகிரி யடக்குபு
மணிதிரை கொழிக்கு மகரா லயத்தை
உழுந்தள வாக்கிப் பருகியொல் லொலிக்கும்
அருவியம் பொதிய மருவிய குறுமுனிக்
கருட்குரு பரனைத் தெருட்டினை யாகலிற்
செந்திலம் பதியிற் றேசிக வவனிலும்
நின்னது பெருமை நினைக்கின்
மன்னிய நிலத்துக் கொன்வளத் ததுவே.

## வெண்பா

9 வளமலியுஞ் செந்திலுறை வாழ்வே குறத்தி
களபமலி கொங்கைபுல்லுங் காலைத்-தளிரனையாள்
கண்ணழகு கண்டோநின் கான்குவளை கன்றுதலை
நண்ணியது தன்சீர் நலிந்து.

---

யானையார். (23) செல்வன்-சூரியன். (24) கடவுள்-சந்திரன். (25) குலகிரி-விந்தமலை. (26) மகராலயம்-கடல். (28) குறுமுனி-அகத்தியர். (25-8) குலகிரி அடக்குபு பருகி மருவிய குறுமுனி. (30) தேசிகன்-ஆசிரியன். 'சிவபெருமான் மதுமலர்க் குழலியை நீத்து உரைக்க நீ கூந்தலார் இருவரும் உடன் அகத்தமர உணர்த்தினை' என்பது நயம். (32) கொன்வளத்தது; கொன்-பெருமை.

9. கான் குவளை; கான் - வாசனை. குவளை என்றது மார்பில் அணிந்த குவளை மாலையை. கன்றுதலை - வாட்டத்தை. குற மகளைப் புல்லுதலால் மாலை குழைந்து

### கட்டளைக் கலித்துறை

10 நலியாப் பதங்க ளனைத்தும் பெறுதவிர் ஞாலமிசைத்
தொலையாமயறருந்தோகையராசைத்தொடர்பறப்பச்
சிலையா யினுங்கள் ளலரா யினுங்கரத் தேந்திவளத்
தலைவாய்க்குமர னிருதாள் சொரிந்தங் கரற்றிடினே.

### கலி விருத்தம்

11 அரமெனப் பொலிகுற வரிவை தன்விழி
வரையற வுரிஞலின் மகிழ்விற் றுங்கொனின்
கரமலர் ஞாங்கர்வேல் கவின்செய் குங்கும
விரைமலி செந்திலாய் விளம்ப வேண்டுமால்.

### ஆசிரியப்பா

12 ஆலம துகுக்கும் வாள்வளை யெயிற்றின்
பல்பொறித் துத்திப் படப்பாம் பெருத்தம்

---

வாட்ட மடைந்ததை வள்ளிநாயகியாரின் கண்ணழகு கண்டு வாட்டமடைந்ததாகக் கூறியது தற்குறிப் பேற்றவணி. புல்லுதலால் தார் குழைதல்: 'கூருகிர் சாடிய மார்பும் குழைந்த நின்றுரும்', 'சாயலின் மார்பிற் கமழ்தார் குழைத்தநின்......றட மென்றோள்' (கலி. கக: 11-2, கக உ: 23); 'பல்லிருங் கூந்தன் மகளிர், ஒல்லா முயக்கிடைக் குழைகவென் றாரே' (புறநா. எ௬: 13-4.)

10. மயல்தரும்-காம மயக்கத்தைத் தருகின்ற. கள் அலர்-தேனோடுகூடிய மலர். அரற்றுதல்-பொருளறியாது சொல்லுதல். ஒப்பு: 'குடங்கை நீரும் பச்சிலையு மிடுவார்க் கிமையாக் குஞ்சரமும், படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் மதுரைப் பரமேட்டி' (திருவிளை. இசைவாது. 34).

11. வரையற-எல்லையின்றி. உரிஞலின் - தேய்ப்பதனால். மகிழ்விற்று ஆம்கொல்-மகிழ்ச்சியுடையதாகுமா? அரத்தைப் போன்ற விழி பார்ப்பதனால் வேல் மகிழுமா? அரத்துக்கும் வேலுக்கும் பகை என்பதை நினைந்து சமத்காரமாகக் கூறினார்.

12. (2) துத்தி-கீற்று. பாம்பு - ஆதிசேடன். (5) நிறீஇய-நிறுவும்பொருட்டு: (6) கண்டெண-கண்டு. (6-10) மயிலின்

பலபல துணியாப் பதைப்புறப் புடையூக்
கடலகடு குழியத் தடவாய் மடுத்துப்
புவிமுறை நிறீஇப வருகரு முகிலைக்
கண்டெனக் களித்துக் கற்பக நாட்டு
மன்னனைப் போல மருங்கினிற் பிறழ்தலும்
இமைத்தலுந் துயிறலு மிலவிவை யென்று
காண்டகுங் கண்ணாக் கருங்கண்மெய் யெலாம்
மன்னுபு விளங்கும் பன்னிறத் தோகை
மீன்வலை யெறிந்தாற் போன்மென விரித்து
வெரிந்நடுக் குழிந்து வில்லெனப் பொலிய
எருத்தமீ நிமிர்த்து மருத்தினா லசைந்து
சுஃஃஃறென விசையிற் சுழன்றுநின் றாடி
விரிவிரல் குவிய மெல்லென வோரடி
தூக்குபு சிரத்திற் றோன்றிய சூட்டுப்
பேய்மருட் கொண்டோன் றாய்நனி துள்ளுதல்
இசையமே லெழுந்தெழுந் தசையவாய் திறந்து
மாதிரம் போர்ப்பக் கீதமோ டிரங்கி
இந்திரன் சினத்தாற் சிந்திய சிறகர்
முளைத்திடப் புவியிற் கிளைத்தெழு மலைகளத்
தேவர்க டேவனைத் தாவற நோக்கி
அஞ்சுபு பெயர்ந்துமுன் னெஞ்சிய வோர்மலை
ஒளித்துழி நாடுத லுறழ்தாத் தணாது
சிறகடிக் கொள்ளுந் தொறுஞ்செறி காலின்

---

தோகைக்கு இந்திரன் உவமை; தோகையிலுள்ள கண்கள் இந்திரனுடைய கண்களைப்போலவே பிறழுதலும், இமைத்தலும் துயிலுதலுமில்லை. (11) மயிலின்தோகையின் விரிப்புக்கு வலையின் விரிப்பு உவமை. (12) வெரிந்-முதுகு. மயிலின் வளைந்த முதுகுக்கு வில் உவமை. (17) தாய்-தாவி. (19) மாதிரம்-திசைகள். இரங்கி-ஒலித்து. (22) தாவற-கெடுதலின்றி. (23) ஓர்மலை-மைநாகமலை. (24) ஒளித்துழி - ஒளிந்துகொண்ட இடமாகிய கடல். (21-30) மலைகளெல்லாம் பெரும்புறக் கடலிற் புக. (32) சிறுவரை-சிலநேரம். (33) வில்-ஒளி. பிணிமுகம்-மயில். (35) வேதண்டம்-மலை. அரிவை-உமையவள். (41) முதற்றொழில்-படைப்பு. நான்முகனைச் சிருட்டி

எழுகட லிடத்து மெழுபெருந் தரங்கம்
அண்டமுங் குலுங்க மண்டும்ப ரொலியிற்
பொள்ளெனப் பெயரா வொள்ளிய கோட்டுச்
சக்கர வாளத் தனிமதில் கழீஇப்
புறம்வளை கடலிற் புகக்கடு விசையிற்
பறந்துபாய் நெடிய பற்பல வண்டமும்
சிறுவரைச் சென்று திரும்பிவந் திருக்கும்
பல்பொறிப் பசிய வில்லுமிழ் பிணிமுக
வெரிந்புறத் திவர்ந்து வரந்தரு செவ்வேள்
வெள்ளிவே தண்டத் தொள்ளிழை யரிவையோ
டாதனத் தமர்ந்தென் காதர மகற்றும்
நுந்தைதன் கைந்நக நுதியினு லிழந்த
தனுதுபுன் றலையினைத் தருகவென் றலகோ
டியாவையும் படைப்போ னிலுனெனப் படுவான்
நின்கடை வாயி னெடுநாள் வைகுதல்
காண்டொறு மவனை முதற்றொழிற் கருத்தன்
ஆமென வுரைப்போ ரகனொடு முகனும்
சந்திறற் கண்ட தாமரை போல
இருந்தன கண்டுநின் னிணையடி தொழுஉம்
தொண்டனேன் வாயுமச் சோமனைக்
கண்டசெங் குமுதக் கவினில வின்றே.

**வெண்பா**

13 நிலவரையி னுணந்த நீவேண்டு வையேல்
அலைவதனு ரம்பநீ ராடிப்-பலர் புகழும்
செந்திநகர் வீதிவலஞ் செய்மனனே தேங்கடம்பன்
கந்தமலர்த் தாளுதவுங் காண்.

---

கருத்தாவென்று சொல்லிக் கொண்டாடுவோர் அவன் நிலைகண்டு நாண அவர்தம் அகமும் முகமும் தாமரைப்போல் வாடின. அதைக் கண்டு என்வாய் மலர்ந்தது. இவ்வரலாறு திருச்செந்தூர்ப் புராணம், பிரமாவுக்கு வரங்கொடுத்த அத்தியாயத்திற் காணப்படுகிறது.

13 நிலவரை-நிலவெல்லை, இவ்வுலகம். அலைவதனுரம்பம் அலைகளையுடைய வதனுரம்பம் என்னும் தீர்த்தம். ஒப்பு: உடைந்த

## கட்டளைக் கலித்துறை

14 காண்டலைக் காணலை செந்தூர்க் குமரன் கழலிணையைப்
பூண்டலைப் பூணலை சாதன ஞானப் புணரியுற
வேண்டலை வேண்டிலை வீயாவுடலம் விளைத்திடுநோய்
மாண்டலை வெங்ஙன் மாளுமந் தோநெஞ்ச வஞ்சகமே.

## கலிவிருத்தம்

15 வஞ்சக மிடைந்தமட வார்விழிக ணேபோல்
நெஞ்சகம லைக்குமெனி னீடுமலை வாயில்
வெஞ்சம முருக்கியவை வேலர்விழி நம்பாற்
றஞ்செயலி லாமைதரு தன்மையரி தன்றே.

## ஆசிரியப்பா

16 அரிதினி லிழைத்த மரமிற வறுக்கும்
அறுவா யிருபுற மமைந்துமற் றிடையினும்
வாய்ப்பவை வாளர மானு நெட்டிலைய
முடங்கலி னுச்சி முருகுயிர்த் தலர்ந்த
பொன்புரை நிறத்துப் பூமட லுதிர்ந்து

---

தெண்டிரை முகாரம்ப தீர்த்தத்தோர் பொழுது, படிந்து மும்முறை குமரநாயகன் பதம் பணிவார். மிடைந்த தேவரு முனிவராரியாவரும் விரைவின். அடைந்தன்னார்பதம் பரவவீற்றிருந்தருள் புரிவார்' (திருச்செந்தூர்ப் புராணம், விநாயகர் சுருக்கு. 7.)

14. சாதனஞானம்-முத்தியை அடையும் உபாயமாகிய ஞானம். 'வீயாநோய்' என்க. நோய் மாண்டு அலைவு எங்ஙனம் மாளும். 'நெஞ்ச வஞ்சகம்' என்பதனோடு 'இருந்தவாறென்னே' என்பதைக் கூட்டுக.

15. வெம்சமம் முருக்கிய - அவுணரின் - கொடிய போரை வழித்த. வை-கூர்மை. தம்செயல் - மடவாரின் விழிகளின் செயல்.

16. (1-7) தாழைமலர் மடலின் தோணி. மானும் - ஒக்கும். இருபுறமும் நடுவிலும் அறுவாய் அமைந்த அரம். மணிநிறம் - நீலமணிபோலும் நிறம். (9) அத்தோணிக்கு மலைபோன்றது நெய்தற்பூ. (10-11) பசிய இலைகளே

மணி நிறங் கவர்ந்து மலிதரு புனலிற்
றோணியின் மிதப்பத் துள்ளிய சிறுமீன்
வீழ்ந்துக மாநீர் போழ்ந்து கொண் டோடி
நெய்தலம் பூவெனு நெடுமலை தடுப்பப்
பிந்தியரு கூர்ந்து பிறங்குபா சடையெனும்
பாரினிற் றடுக்கிப் பலகண மென்னு
நெடுநாட் கிடந்து நீங்குபு சுழலும்
கழியெனும் பெரிய கருங்கடன் மருங்கிற்
சுரும்பு நாண் மலரிற் றாதைந்துபாண் மிழற்றச்
செய்யபொற் றாது திமிர்ந்ததீ யொத்தொளிர்
அடுக்கிய தீபத் தழகினைக் காட்ட
அவை தொறுஞ் செம்ம லகன்றுதிர் கின்ற
நெய்த்துளி யெரிந்துதிர் நேர்மையைக் காட்டத்
தேன்வழிந் தொழுகுத றேங்கிய வேறுநெய்
வீழ்தலைக் காட்ட வியனெடுஞ் சாகைக்
கரத்தினிற் பிடித்துக் காற்றினிற் சுழற்றிப்
பொருதிரை சுருட்டும் விரிபுன லரசற்
காரா தனைதினஞ் சீரா வியற்றும்
புன்னையம் பொதும்பர் புறததினி லுடுத்த
வாங்கிய தண்கட லோங்குசெம் பவளமும்

அந்தத் தோணிக்குப் பாறைகள்; பார்-பாறை. (11-12) பலக்ஷண நேரம் நெடுநாள்களுக்கு. (13) கழி கடலுக்கு. (14-24) புன்னை மரத்தின் ஆராதனை. (14) நாண்மலர்-அன்றலர்ந்த மலர். (15) தாது-மகரந்தப்பொடி. (17) அவை என்றது புன்னைப் பூங் கொத்து. செம்மல்-பழம்பூ. (20) சாகை-கிளை. (22) புனலரசன்-வருணன். புன்னைக்கொத்து தீப அடுக்குக்கு. பூந்தாது ஜுவாலைக்கு; பழம்பூ எரிந்து உதிரும் நெய்த்துளிக்கு; தேனொழுக்கிற்கு நெய் யொழுககு; கிளை கரத்துக்கு. சுரும்பு மந்திரம் சொல்லுவோருக்கு. (25) வாங்கிய-வளைந்த (28) தவளவெண்-ஒருபொருட்பன்மொழி. (29) பரவர்-பரதவர் (25-9) குப்பைகளாக உள்ளவை பவளம் தரளம் முதலியன. (37) கொடுமரம்-வில். (38) அஞர்-துன்பம். (40) செயப்படுபொருளாய்; 'பிறருடைய செயலுக்கு ஆளாய்' என்ற படி. (42) பூங்கணை ஆளி-மன்மதன். (43) மெய்-பிரணவப்பொருள்.

சீத நீரமுத் தெள்ளிய தரளமும்
விசைத்தெழு கலனுடை வெரிந்கொண்முட் சுறவமும்
தவழ்சுரி முகத்த தவளவெண் சங்கமும்
பரவர்முன் குவித்த பன்னெடுங் குப்பைகள்
பரத்தியர் விலையிற் கொடுத்திடு மோதையவ்
வேலையி னொலியைச் சாலவு மவிக்கும்
நந்தன வனஞ்சூழ் செந்திலம் பதியிற்
பாயிருள் பருகிக் காய்செழும் பருதியின்
இருண்மல மகற்றி யருளொளி யுகுக்க
வீற்றிருந் தருளு மாற்றலை யறியா
திருமையுங் கெடுக்க மருமலர்க் குழலியர்
இருபெரும் புருவக் கொடுமரங் குனியா
அலகின் மாந்த ரனைருற விடுக்கும்
விழிக்கணை யென்மே லொழிப்பின் றொருங்கே
எயப்பெரும் புலையேன் செயப்படு பொருளாய்
எய்த்தன னிதுவரை யிதுபொழு தையமுன்
பூங்கணை யாளி பொடிபட விழித்த
ஐம்முகத் தோர்க்கு மெய்விரித் துரைத்த
அறுமுகக் கடவு ளொருவனீ யாதலின்
நோவுமக் காமன் சேவகப் படையே
வெல்லுத லுனக்கரி தில்லையென் றறிந்து
சிறியோ ரேனும் பெரியோர் பாற்சென்
றிரந்தவை யருள்வ ரெனுந்தேற் றத்தால்
ஆயிரங் கோடி மாயிரும் பருதியர்
ஒருங்குதித் தன்ன வொளிவிடு வேலோய்
ஐய நின்றன்னை யடைந்தன னவர்தம்
மையலை யறுத்து மாறாத்
திருவருள் கிடைப்ப வருளுவை யன்றே.

---

(43.4) 'ஐம்முகத்தோர்க்கு உரைத்த அறுமுகத்தோன்' என்பது நயம். **முடிப்:** 'செந்திலம் பதியில் வீற்றிருந்தருளும் ஆற்றலை யறியாது குழலியர் விடுக்கும் விழிக்கணை ஒழிப்பின்றலைய. புலையேன் எய்த்தனன்; நீ ஆதலின் அரிதில்லையென்றறிந்து அடைந்தனன்; அறுத்து, கிடைப்ப அருளுவை யன்றே.'

### வெண்பா

17 அன்று புனத்தி லலர்வேங்கை யாயெழுந்து
நின்றருளுஞ் செந்தி னிமலனே—பொன்றகுணத்
தென்னு ளொளித்த வியல்பறிந்த வக்கணமே
நின்னுளொளித் தேன்மாயை நீத்து.

### கட்டளைக் கலித்துறை

18 நீத்தார் பெருமை நினைகிற் கிலேனிலை யாதெனநூல்
பார்த்தா ணவத்தைப் பரிகிற் கிலேன்பஞ்ச பாணனைமுன்
சீத்தா னருளிய செந்தூர்க் குமரநின் சேவடியாம்
பூத்தா னெனதுளம் பூப்பதெவ் வாறு புகலுகவே.

### ஆசிரிய விருத்தம்

19 புகழ்ப ரந்தவலை வாயில் வீதிவரு
புங்க வேளழகு காண்டலும்
அகநெ கிழ்ந்தட லெங்கு மாதர்கொ
ளனங்க னைங்கணை யனேகமாய்த்
தொகுதி றம்பொரு சிலிர்ப்பை நம்முடைய
தோகையாண் முலைகொ டொய்யிலாய்
தகநெ டுங்கடலி னேத வாடையெறி
தன்மை யென்று மறைத் தாளரோ.

---

17. நின்னுள் ஒளித்தேன்-'என்னைக்கண்டிலேன்' என்றபடி.

18. பரிகிற்கிலேன்-நீங்கவில்லை. சீத்தான்-அழித்தவன்; சிவபெருமான்.

19. மாதர்-விருப்பம். தொய்யில்-காமவல்லியாகிய கொடியைச் சாந்தினால் முலைகளில் எழுதும் ஒரு விசேடம்; சீவக. 2442. கணை பொருவதனால் உண்டாகும் சிலிர்ப்பை வாடையினால் உண்டான சிலிர்ப்பாகக் கூறியது இலேசவணி. ஒப்பு: 'மதுப்பொழிதார் மன்னவனை மால்கரிமேற் கண்ட, விதிர்ப்பு மயிரரும்பு மெய்யும்-புதைத்தாள், வளவா ரணநெடுங்கை வண்டுவலை தோய்ந்த, இளவாடை கூர்ந்த தென' (தண்டியலங்காரம். மேற்.)

## ஆசிரியப்பா

20 மறையொலி வழங்கு மல்ல லோங்கிய
வாள்படு சுதையின் மாட மாளிகை
மேல்டையிற் பசிய நீடுமென் சிறகர்
மயிலினங் குழுமலின் மாசிடைப் பொலிந்த
திங்களிற் றோன்றுஞ் செந்திலம் பதியிற்
கருணையி னிருக்கு மறுமுகக் கடவுள்
சந்தன சலத்தி னென்றனெஞ் சகமும்
கோயில் கொண் டருளுஞ் சேயிலை வேலோய்
கஃஃஃறெனுங் கானக் கதிர்த்தினை காக்கும்
குறக்குலக் கன்னி குமுதவாய் மிச்சிலை
நுகர்வதொன் றன்றி நுந்தைபோ லேனைச்
சிறுமைகள் சிறிதுஞ் செய்தறி யாதோய்
பாலினைச் சேரு நீரது போல
வேல்விழி யெயினர் விளங்கிழை யரிவை
பழக்கமே பெரிதும் பழகினை யாதலிற்
றன்பெவ ருறினுந் தன்பெனக் கருதும்
கருத்துவந் தெய்தா திளமையுங் கண்ணலின்
ஆயினுங் கடிந்து மாய்வுறப் புடைத்துச்
சிறையினிற் படுத்த திசைமுகத் தோனை
விடுக்கவென் றிமையோர் வேண்டிட விடுத்தலின்
இற்றைநாள் காறும் யார்யா திரப்பினும்
தடையின் றுதவுங் கொடையோ னாதலின்
மகவு வேட்டன விகவா துதவுதல்
இருமுது குரவ ரியற்கை யதாகலின்
வினையே னென்று வேண்டுவ லருண்மதி
சூர்முத றடியச் சுடரிலை நெடுவேல்
ஓச்சுநா ளதனி லுருத்தெழு கோபத்
தீத்தனை நோக்குபு தேங்கிய கடல்கள்
ஏழையுஞ் சுவற்று மிடைப்படு நமையும்

---

20. (1) மல்லல்-வளம். (2) வாள்-ஒளி. 1-5: மயிலோடு கூடிய மாளிகைக்குத் திங்கள் உவமை (8) சேயிலை-சிவந்த இலை.

விழுங்குவ தன்றி விடுக்கறி யாதென்
றோலமிட் டப்பொழு தோடிவந் திம்பர்
மனத்துய ரோடும் படுத்தன னின்னும்
அலைகடற் பாய லணுகுதற் கஞ்சித்
தன்மெலி வுரைப்ப நின்னெதிர் வரவும்
வேலினை யஞ்சி மாலுநின் மாமனை
வருகவென் றழைத்தவன் மனத்திற்
பருவரா வண்ணம் பயங்கெடுத் தருளே.

### வெண்பா

21 கெடுதிபய வாச்செந்திற் கேண்மையோய் நின்னை
விடுதிபய வாது விழுங்கும்-அடியவரை
வாரி விழுங்குதலால் வாரிபுடை சூழுலகிற்
றேரி லரிதுன் றிறம்.

### கட்டளைக் கலித்துறை

22 திறமா ரிலைத்தலை வேலோச்சி நாகத் திறனழித்த
மறவோ னெனநின் றிறனறி யாதென் மனக்கருங்கல்

---

(26) சூர்முதல் தடிய-சூரபன்மாவாகிய தலைவனைக் கொல்ல, (32) படுத்தனன்: திருச்செந்தூரில் முருகன் சந்நிதிக்கருகில் திருமாலின் கோவில் அமைந்துள்ளது. (35) மாலும்-மயங்கும். (37) பருவரா வண்ணம்-துன்பப்படாத விதம். பயம்-அச்சம்.

முடிபு: கடவுள் 6, வேலோய் 9, அறியாதோய் 12, ஆதலில் 15, ஆயினும் 18, விடுத்தலின் 20, ஆதலின் 22, அருண்மதி 25, ஓச்சுநாள் 27, நோக்குபு 28, ஓடிவந்து 31, படுத்தனன் 32, மாலு நின் மாமனை 35, அழைத்து 36, பயங்கெடுத்தருள் 37.

21. விழுங்கும் அடியவரை; விழுங்குதல்-முக்கரணங்களாலும் முருகனை யன்றி வேறு எதனையும் சாராதிருத்தல்; 'விழுங்கியும் ஒல்லகில்லேன்' (திருவா: திருவண்டப்.); 'கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியை' (திருவிசைப்பா.) அடியவரை விழுங்குதல்-தன்மயமாக்குதல்; 'யானாகியவென் னைவிழுங் கிவெறுந், தானாய் நிலை நின்றதுதற் பரமே' (கந்தரனு பூதி, 28.)

22. இலைத்தலைவேல்-இலைத்தொழிலமைந்த தலையையுடைய வேல். நாகம்-கிரவுஞ்சமலை. 'என்மனக் கருங்கல் நின் திறனறி

இறவாமை யையழிப் பாரெவ ரென்றிறு மாந்தந்தோ
குறமான் றிருடிய செந்தூ ரிருந்த குலோத்தமனே.

விருத்தம்

23 குலனொடு சாதி மாய்ந்த குணப்பெருங் குன்றே நின்
பொற்
குலனொடு சாதி மாய்ந்த கோதையைப் புணர்ந்
திடாது
குலனொடு சாதி பூண்ட குறத்தியை மணந்த தென்
னென்
குலனொடு சாதி மாய்க்குங் குளிரலை வாயிற் கோவே.

ஆசிரியப்பா

24 கோடுகள் பொலிந்த நீடிய சிரத்துச்
சக்கர வாளந் தமனிய மதிலாப்
பெரும்புற வேலை பிறங்கிய வகழாச்
சந்திர சூரியர் தமனியப் புரிசை
உள்ளுறச் சூழு நல்லகா வலராத்
தாரகைக் கணங்க டங்குசே னைகளாக்
குலவரை முதலா நிலவிய நெடுவரை
மாட மாளிகை மேடைக ளாகத்
தாழ்ந்தவேழ் கடலவை சூழ்ந்தநீ ராவியாத்
தேவர்கண் முதலிய யாவருங் குடியாக்
கந்தமா தனமெனுஞ் சுந்தரக் கோயிலில்
இறைமைவீற் றிருக்கு மெழிற்பெருங் குரிசில்
குருநிலாக் கான்ற குளிர்மணி கொழிக்கும்
அலைவா யுகந்த மலைவாய்க் குமர

---

யாது இறுமாந்திருந்தது; அதனை அழிப்பாயாக’ என்பது கருத்து.

23. கோதையை-தெய்வயானையாரை.

24. (9) ஆவி-வாவிகள் (11) கந்தமாதனம்-திருச்செந்தில்.
1-11 திருச்செந்தூருக்குப் பூசக்கரவளாகம் உவமை. (19) கரிசு அற-

நின்னது செங்கோ னிலீஇய வரைப்பின்
நின்னடி யவனு நின்றவென றனையே
யானுநின் னடியே னெனவறி யாத
படிமறைத் துந்திக் கடிமலர்ப் பொகுட்டுப்
பிரமத் தச்சன் கரிசற வெடுத்த
நெட்டுடற் புரிசை யுட்படுத் தடக்கிக்
காம மாதி யேமுறு மள்ளர்
புடை சூழ்ந் திருக்கக் கொடுமல மென்னும்
ஏதின் மன்னவ னிருளர சியற்றும்
எல்லையில் யான்முன் னியற்றுநல் லூழும்
உண்டுகொ லோநின தொண்டளிர்ப் பாதம்
ஓவா தேத்துந் தாவா நிலைமையர்
குழூஉக்கொண் டேகுங் கோலநோக் கினனால்
அனைவரும் பொதுநோக் களித்தன ரன்றே
என்னுடைப் பகைஞ னிவன்றம தடிமையென்
றறிந்தன ராமென வயர்ந்தன னதுகண்
டவனுடை யினத்தா ரழிந்தன ராகலிற்
புரிசையு மாங்கே பொன்றிய தவ்வுழிக்
கெடாதநின் பதநிழல் கிடைத்ததெந் நாளும்
மாறா வின்ப மாகடல் வளர்ந்த
தனையவர் பெருமை யினைய வாகலிற்
குலவுநின் பெருமை குவலயத்
தலகிட லலகி னிலவுத லின்றே.

---

குற்றம் நீங்க. (21) ஏம் உறு மள்ளர்-இன்பமுடைய வீரர். (23) ஏதின் மன்னவன்-பகையரசன். இருள்-அஞ்ஞானம். (29) பகைஞன்-மலம். (30) அறிந்தனர் ஆம் என-முருகனுடைய அடியவர் அறிந்தனர்என்று. (31) அவனுடைய இனத்தார்-காமமாதி மள்ளர். (32) புரிசை-உடல். (33) பதநிழல்-மோட்சவீடு; திருவடியே வீடாம். (35) அனையவர்-அவ்வடியார். (37) அலகில்-அந்தக் கணக்கில்.

முடிபு. குரிசில் 12. குமர 14. என்றனையே 16. பிரமத்தச்சன் 19, அறியாதபடி மறைத்து 17-8. எடுத்த புரிசையுள் 19-20, மலமென்னும் மன்னவன் அரசியற்றும் எல்லையில் 22-4, நிலை

### வெண்பா

25 நிலமுவக்குஞ் செந்தி னினைக்க நம ரங்காள்
அலமரல்செய் யாணவம்போ லம்ம-நிலவி
நமையொளிக்கு மேனு நனிகுமரன் ஞான
அமிழ்தளிக்குந் துன்ப மறுத்து.

### கட்டளைக் கலித்துறை

26 அறுகான் மிழற்றுசெந் தேனார் குவளை யலங்கலந்
தோள்
இறைவா விருகிழ மைத்தாங் குறிஞ்சி யெழின்
மதர்க்கட்
குறமான் றனக்கு மதுவே யதனிற் குறுகலொழித்
துறுமீ னெறிபலே வாயோர் கிழமையை யுற்ற
தென்னே.

### விருத்தம்

27 என்பொடு நரம்பிவை யியைந்ததனு வாந்தனுவை
யிம்பரிற் கோட்டி யொழியா

---

மையர் 26. கோலம் நோக்கினனல் 27. அனைவரும் பொது நோக்களித்தனர் 28. பகைஞன் 29, அயர்ந்தனன் 30. இனத்தார் அழிந்தனர் 31, பொன்றியது 32, நிழல் கிடைத்தது 33, இனைய ஆகவில் 35, நின்பெருமை 36, அலகினில் நிலவுதல் இன்றே.

25. நினைக்க-நினைப்பதனல்; 'நினைக்கக் கடவீர்' என்றலுமாம். நமரங்காள்-நம்மவர்களே. போல், அம்ம: அசை. ஆணவம் ஒளிக்குமேனும் குமரன் துன்பமறுத்து ஞான அமிழ்து அளிக்கும்.

26. அறுகால்-வண்டுகள். இருகிழமைத்து ஆம்-இருவழியில் உரிமையுடையதாகும்; என்றது பார்வதி தேவியார் பர்வதராஜன் புத்திரியாக இருப்பதனல் தாய்வழியிலும் சிவபெருமானின் இருப்பு வெள்ளியங்கிரியாதலால் தந்தைவழியிலும் ஆக இருவழியிலும் குமரனுக்கு மலைநிலமாகிய குறிஞ்சி உரியதாயிற்று.

27. தனுவாம் தனு-உடலாகிய வில். கோட்டி-வளைத்து. குணம்-வில்லின் நாண், இயல்பு. இருவினையாய சார்பிலர்-நல்வினை

அன்பெனு நெடுங்குண மிமைக்கின்மன
மேபுகர்னை யானுது மலர் தூற்றிட
வின்மலி கொடுந்தரள மோடுபவ
ளந்திரைகள் வீசியெழு செந்தி னகரான்
தன்னுடைய கூர்த்தவிழி யம்பினிரு
வினையாய சார்பிலரை யெய்து விடுமே.

## ஆசிரியப்பா

(28) விடுமுனி வரர்க்கும் வீயாப் பயமீந்
தின்பினிற் சேர்வா ரீட்டிய காசுகள்
முழுவதும் பறித்து முத்தமுன் பளித்துச்
சங்குகள் சிலம்பத் தழுவலை மன்னி
புட்குரல் மலிவித் திட்டமாய் வாழும்
வேசையிற் பொலியும் வியன்மா தட்பச்
சரவணத் திருந்து தாரகை முலைப்பால்
உண்டது போதா துலகினுக் கெல்லாம்
படுதிரை மேய்ந்து பசந்துகா லத்தின்
எழுமழை போல விரக்கம்வைத் தருளும்
கொம்பனை யாடன் கொங்கையி னறும்பால்
பொன்மலை முழையிற் பொங்கிவெள் ளருவி
இருகவ ராக விழிவது போல

---

*தீவினை என்னும் பகைவர். 'மனமே, இயைக்கின் செந்தினகரான் விழியம்பின் சார்பிலரை எய்து விடும்' என்று கூட்டுக. வில் வளைக்கும் செயல் அடியாருடையதாக அம்பெய்யும் செயல் முருகனுடையதாகக் கூறப்பட்டது ஒரு நயம். இருவினைக்கும் இருவிழியம்பு கூறப்பட்டதும் ஒரு நயம்.

28. அடிகள் 1-6 செந்திலுக்கும் வேசைக்கும் சிலேடை. பயம்-அச்சம் (முலைப்பால்.) சேர்வார்-அடைபவர் (தழுவுவார்.) காசுகள்-குற்றங்கள் (திரவியம்.) முத்தம்-முத்துக்கள் (வாய் முத்தம்.) சங்கு-வளைப்பூச்சிகள் (வளையல்கள்.) தழுவலை மன்னி-கரையைத் தடவும் கடல் அலைகளைப் பொருந்தி (அணைதலைப் பொருந்தி.)

இருகடை வாயிற் சொரிதர வுண்டு
பாங்கினி லிருக்கும் பனிமதி முடியோன்
மடிமிசைத் தவழ்ந்து மார்பகத் திலங்கு
நூலெனு மேணி நுடங்கமே லேறிப்
புயவரை மீமிசைப் போந்திருந் துச்சியிற்
சூழ்ந்தவார் சடிலச் சுனையினிற் றிரையெறி
கங்கையைக் கவிழ்த்துக் கனிவாய் மடுத்துப்
பனிமதிக் குழவிப் பண்ணியஞ் சுவைத்து
வாயகத் தூறலின் மஞ்சன மாட்டிக்
காதில்வெண் குழையைக் கையினிற் பறியா
உருளையி னுருட்டி யொளிர்செழுங் கொன்றைக்
குப்பையை யளாஅய்க் குடங்கையாற் கொட்டி
இருமுது குரவர்க் கெழின்மகிழ் பூப்ப
முத்தமீந் தருளி முயலொடு தோன்றும்
வானக மதியை வருகவென் றழைத்துச்
சிற்றி லழித்துச் சிறுபறை முழக்கிச்
செம்பொனீள் கொடிஞ்சிச் சிறுதே ருருட்டிப்
பற்பல வண்டமும் பாழ்படத் துளக்கி
ஒருதிசைக் களிற்றோ டொருதிசைக் களிற்றை
முட்டவிட் டண்ட முகடுற வெறித்து
மலையெனச் சுருட்டு மலைகட லேழையும்
தமனிய மேருவிற் றுய்க்குதித் துடைத்துச்
சந்திர சூரியப் பந்தெடுத் தடித்துத்
தாரகைக் கழற்காய் தடக்கையிற் றெறித்துத்

---

(7) தாரகை-கிருத்திகை மாதர் அறுவர். (11) கொம்பனையாள்-உமாதேவியார். (12) பொன்மலை முருகன் மேனிக்கு உவமை.

அடிகள் 15-39 முருகனுடைய விளையாடல்களைக் குறிக்கும்.

(21) பண்ணியம்-பட்சணம். (23) வெண்குழை-சங்கினால் இயன்ற காதணி; 'சங்கவெண் குழையோர் காதிற் கோமான்' (தே.) (24) உருளை-சக்கரம். அடிகள் 27-30 பிள்ளைத் தமிழ்க்குரிய சில பருவங்களைக் கூறுகின்றன. (33) கைதவச் சூர்க்களை-வஞ்சனையை

தெய்வதப் பயிர்க்குக் கைதவச் சூர்க்களை
வேரறப் பிடுங்கி விளையாட் டயரும்
திருமக ளுறையுஞ் செந்திலம் பதியின்
அமரர்க ளுயக வடிய்வர் நாயக
ஒருபதத் தொருவ ரொருத்தியை யல்லா
திருவரைக் கலந்து மின்பமெய் துநரைக்
காண்டலுங் கேட்டலுங் கருதலு மறியேன்
அழகிற் சிறந்த வாருயி ரென்னும்
அலகிலா மடந்தைய ரணைவுறத் தழீஇ
இடைவிடா தின்ப மீந்துநேர் படாத
பருவக் கன்னியர் பன்னுதற் கரிய
அலகிலா தவரையு மணையவிச் சித்தனை
நின்போற் காம நிலையின ரிலரே
ஆயினு மேனோ ரணைவுறுங் காமக்
கழிபெருந் துன்பினைக் கழித்தல்
விருதாக் கோடலி னதுவழு வன்றே.

வெண்பா

(29) வழுவறிந்து தண்டிக்கும் வள்ளலைச்சேர்ந் துய்யா
திழிவுகொ லென்றெய்தா ரெவரே-கழியலைவாய்க்
கஞ்சன்முன் குட்டுண்டுங் கந்தாவென் றேத்துதலால்
எஞ்சுமொரு கந்தருக வென்று.

---

யுடைய சூரனாகிய களைப்பயிரை. (42) ஒருபதத்து-ஒரு சமயம். (45-6) ஆன்மாக்களை மடந்தையர் என்றார். (47-8) 'நேர்படாத பருவக் கன்னியர்' என்றது மோட்சமார்க்கத்துக்குத் தகுதியில்லாத மாக்களை. (53) விருது-வெற்றியடையாளம்.

முடிபு: வேசையிற்பொலியும் 6. செந்திலம் பதியின் 40. நாயக 41, அறியேன் 44, தழீஇ 46, ஈந்தும் 47. இச்சித்தனை 49, இலரே 50, ஆயினும் 51, கழித்தல் 52, கோடலின் அது வழுவன்று 53.

29. வள்ளல்—முருகன். கந்தா என்று—கந்தனே என்று, என் தலையைத் தருக வென்று; கம்—தலை. 'கஞ்சன் ஒருகம் தருக வென்று கந்தாவென்று எத்துதலால் எய்தார் எவரே!' எனக் கூட்டி முடிக்க.

## கட்டளைக் கலித்துறை

(30) தருவா னிலத்தி னரசுங் கமலா தனத்திருப்பும்
குருவாய்ப் பயக்கடற் பாயலும் வேண்டிலன் கூவுமலை
ஒருவா நவமணி புன்னையங்கானத் தொதுக்கலைவாய்
வருவான் திருவடி யோவா திறைஞ்சு வரமலதே.

## விருத்தம்

(31) வரங்கி டந்தெ ழுந்து ருண்டு
மல்ல றங்கு கோயில்வாய்
உரங் கிடந்தி லங்கலங்க
லொன்றி சைக்க ருஞ்சுரும்
பிரங்கவீழ்ந் தொருங்கொ டும்ப
ரேத்து செந்தி லேத்தினோர்
அரங்க னஞ்ச முந்து கஞ்ச
னஞ்ச வீற்றி ருப்பரே.

---

30. தருவான் நிலம்—கற்பக தரு அமைந்த விண்ணுலகம். கமலாதனத்து இருப்பு—பிரமனுடைய பதவி. குருவாய்—ஒளி பொருந்திய இடத்தையுடைய; குரு—பெருமையுமாம். பயக்கடல்—பாற்கடல். பயக் கடற் பாயல்—திருமாலின் பதவி. 'வேண்டின் இவை எல்லாம் கிடைத்தல் எளிதே; ஆயினும் நிலையற்றவை' என்று கருதி 'வேண்டிலன்' என்றார். ஓவாது—இடைவிடாமல். 'இறைஞ்சுகின்ற வரம் அல்லாமல் அரசும், இருப்பும், பாயலும் வேணடிலன்.'

31. மல்லல் தங்கு கோயில்—வளப்பம் மிகுந்த கோவில். உரம் கிடந்து இலங்கு அலங்கல்—மார்பிலே கிடந்து விளங்குகின்ற மாலை. அலங்கல் ஒன்று இசைக்கரும் சுரும்பு—மாலையைப் பொருந்தியுள்ள இசையை யுடைய கரிய வண்டுகள். ஒருங்கொடு—ஒருமிக்க. உம்பர்—தேவர். வீழ்ந்து செந்தில் ஏத்தினோர். அரங்கன்—திருமால். கஞ்சன்—பிரமன். முருகனடியாரைக் கண்டு திருமாலும் பிரமனும் அஞ்சுவர்.

**ஆசிரியப்பா**

(32) இருடிரண் டெழுந்த விரவியை யஞ்சி
நெருங்கிய மடலி னொருங்கொளித் தாங்கு
ஞெமரிய கருங்கனி நிலவிய நெடும்பனை
இலைநடுத் துளைசெ யிருப்புநெட் டூசி
வாய்பொருங் கவைநா வாசுகி யெருத்தம்
பொடிபடச் சினத்துப் புடைத்தெழுந் தாடும்
சுடர்விடு கருங்கட் டோகைநீள் பசிய
மயில்வெரிந் புறத்து மணிக்கடல் விளங்கும்
வடவா முகமென மருவிய செவ்வேள்
பன்னிறங் காட்டும் வின்மலி மோலியும்
அன்பர்க ளுளங்க ளங்காந் தருந்த
அருளமிழ்து கொடுக்கு மாறுதண் முகமும்
மலமெனுங் கொடியோன் மாய்வுறு விடமாய்
எளியேன் றமைக்கு மின்னமு தாகப்
பார்த்திடு மிமையாப் பன்னிரு விழியும்
ஆறிரு கரமு மவைதொறு மிலங்கும்
குருதிகொப் புளிக்குங் கொடுந்தலை ஞாங்கரும்
முத்தலைக் குடுமி முனைநெடுஞ் சூலமும்
ஓங்குபு வீசுந் தீங்குமிழ் வாளும்

---

32. (1 - 3) ‘எழுந்த இரவியை அஞ்சி இருள் திரண்டு ஒளித்தாங்கு ஞெமரிய கனி’ என்க. இருளின் திரட்சிக்குப் பனம்பழம் உவமை. (4) இலை - பனையோலை. (4 - 5) பனையோலையைத் துளை செய்யும் இரட்டை முனை ஊசியின் வாய் வாசுகியின் நாவுக்கு உவமை. (5) எருத்தம் - கழுத்து. (4 - 8) : ‘வாளெயிற துற்றபகு வாய்தொறுநெருப்புமிழும் வாசுகியெடுத்துதறு வாசிக்காரனும்’ (வேளைக்காரன் வகுப்பு.) (8) வெரிந் புறத்து- முதுகினிடம். மணிக்கடல் - நீலமணி போலும் கடல். (8 - 9) மயிலுக்குக் கடலும் அதன் மீது பொலியும் செவ்வேளுக்குக் கடலின் கண்ணுள்ள வடவைத் தீயும் உவமை. முருகனுக்குத் தீ : ‘உருவு முருவத் தீயொத்தி’ (பரி. கக: 99.)

(16 - 29) பன்னிரு கைகளின் வருணனை :
(17) ஞாங்கர் - வேல். (20) புங்கம்-அம்பின் தலை. (23) மாமுதல்

பூட்டுபு தொடுக்கும் புங்கவெங் கணையும்
ஆணவக் கடகரி யடக்குமங் குசமும்
அஞ்சினோர்க் கஞ்சலென் றருடரு மபயமும்
மாமுத றடிந்த வள்ளுகிர்க் கோழியும்
உருத்தெழு கனற்பொறி யுகுக்குநீள் குலிசமும்
ஆமையோ டனைய காமரு தோலும்
யான்வணங் குதல்போல் யாவரும் வணங்குக
எனவணங் குதல்போ லெதிர்வளை வில்லும்
பாசம்விட் டோரைப் பற்றுமொண் பாசமும்
இடுபொருண் மூன்று மேற்குமவ் வரதமும்
செங்கடம் பலருஞ் செய்யவா பரணமும்
அரையினிற் றிகழு மெரிபுரை யாடையும்
அன்பர்க ளுளங்க ளாங்காங்கு மலர்ந்த
பொன்னுரை கடுக்கும் பூங்கழற் கமலமும்
பாசொளி விரிக்கும் படிவமு மிடக்கைத்
தொங்கலுங் கழுநீர்ச் சுடர்வலக் கரமும்
இருவிழி பிறழு மொருமலர் முகமும்
பீதாம் பரமும் பீடுய ரரச
அணியொடு மிலங்கும் பிணிமலர்க் கோதைத்
தெய்வ யானை சேர்ந்தவோ ரிடமும்

---

தடிந்த கோழி - மாமரத்தைத் தடிந்ததனால் வந்த கோழி; 'மரம் சுட்ட சாம்பல்' என்றாற் போலக் கொள்க. (24) குலிசம் - வச்சிராயுதம். (25) தோல் - கேடயம். (28) பாசம் விட்டோர் - அடியவர். (33) பொன்னுரை - பொன்னுரைக்கும் கல்.

(34 - 9) தெய்வயானையார் வருணனை :

(34) பாசொளி - பசிய நிறம். (39) இடம் - முருகனது இடப்பாகமும்.

(40 - 46) வள்ளி தேவியார் வருணனை :

(42) மாதர் - அழகிய. (44) வேடர் மகளார் ஆதல்பற்றி மரவுரிகூறப்பட்டது. (49) வலமும் - முருகனது வலப் பாகமும்.

இலைத்திரு நீறு - இலை விபூதி; திருச்செந்தூரில் விபூதியைப் பன்னீரிலையில் வைத்துக் கொடுப்பது வழக்கம். (53) அருள் நீட்சியின் - அருளின் நீட்சியைப் போல்.

பொன்னொளிர் மேனியு மின்னரி மதர்க்கண்
இரண்டிருந் தாடு மெழின்முக மொன்றும்
வலத்தினிற் றாங்கு மாதர்செங் கரமும்
இடத்தினிற் கமல மேந்திய கரமும்
மரவுரி திகழ்ந்து வசிந்தலை மருங்கும்
குறவணி புனைந்த கோலமுங் கச்சும்
வளம்பெற வியைந்த வல்லியோர் வலமும்
வதனா ரம்ப மணிக்கடற் றீர்த்தமும்
வெந்துய ரகற்றுங் கந்தபுட் கரணியும்
மலப்பிணி தீர்க்கு மிலைத்திரு நீறும்
உம்பர்க ளனைவருங் கும்பிடுங் கோலமும்
வரங்கிடந் தேத்துநர் மாட்சியு மெனவும்
காண்டொறுங் காண்டொறுங் காதல்
நீண்டதன் னோனரு ணீட்சியி னெனக்கே.

வெண்பா

(33) என்னையழித் தன்றே யெனக்குரிய னாயிருத்தல்
என்னை யுரையா யிருஞ்சினைத்த—புன்னைமலர்
பூத்துதிர்க்குஞ் செந்திற் புறத்திருந்தெ லாம்
காத்தழிக்குங் கந்தாகு கா. [படைத்துக்

முடிபு : செவ்வேள் 9. மௌலியும் 10, முகமும் 12, விழியும் 15, ஆறிரு கரமும் அவைதொறு மிலங்கும் ஞாங்கரும்......வரதமும் 16 - 29, ஆபரணமும் 30, ஆடையும 31, கழற் கமலமும் 33, தெய்வ யானை சேர்ந்த ஓர் இடமும் 39, வல்லியோர் வலமும் 46, தீர்த்தமும் 47, புட்கரணியும் 48, இலைத்திருநீறும் 49, கோலமும் 50, மாட்சியும் எனவும் காண்டொறும் காண்டொறும் எனக்கு அன்னோன் அருள் நீட்சியின் காதல் நீண்டது 51 - 3.

33. 'என்னை அழித்து' என்றது 'ஜீவபோதத்தை அழித்து' என்றபடி ; 'எல்லா மறவென் னையிழந்த நலம். சொல்லாய் முருகா சுரபூபதியே' (கந்தரலங்காரம், 2). சினைத்த புன்னை - கிளைகளையுடைய புன்னை மரம் ; எழுவாய்.

### கட்டளைக் கலித்துறை

(34) கார்பூப்ப மான்விழிக் கார்செந்தில் வேள்வரைக்
காவிலன்பர்
தேர்பூத்தி லாமையி னீர்பூத்த சூல்கொளோர்
செல்வியை யோர்
*தார்பூத்த கூந்தல்கண டாங்கே கருக்குறி சா......
ஏர்பூத்த பிள்ளை தனைப்பயந் தாலது வேய்த்திடவே.

### விருத்தம்

(35) இடங்கர்க் குளத்தி னெழுதா மரைக்க
ணிசையுண் டழுங்க லெனவே
மடங்கக் குளத்து மடவா ரிடத்தின்
மதிமாயு மூடர் வசமாய்
அடங்கிக் கிடக்கு மனியாய துன்ப
மணுகாம னூரு மருளாய்
குடங்கைத் தலத்தி லயில்வேல் படைத்த
குளிர்செந்தின் மேய குகனே.

### ஆசிரியப்பா

(36) மேய்ந்திரை தனது காய்ந்தவெம் பசிதீர்த்
தரியபுன் பார்ப்புக் கருத்தவீர்ங் கதுப்பின்

---

* விட்டுப்போன இடம் விளங்கவில்லை.

34. கார் பூப்ப - கார்ப் பருவம் தோன்ற. மான் விழிக்கார் - மான் போன்ற விழிகளாகிய மேகம்; என்றது தலைவியின் கண்களை. தேர் பூத்திலாமையின் - தேர் வந்திலாமையின். சூல் - கரு. ஓர் தார் பூத்த கூந்தல் - ஒரு தோழி. அது ஏய்த்திடவே - அப் பயந்த செயலை நிகர்க்கும்படி.

35. இடங்கர் - முதலை. தாமரை - தாமரைக்கொடிகள். இசையுண்டு அழுங்கல் - கட்டுண்டு வருந்துதல். மடம் கக்கு உளத்து மடவார் - அறியாமையைக் கக்குகின்ற உள்ளத்தையுடைய மகளிர். மூடர் வசம் அடங்கிக் கிடத்தலுக்கு இடங்கர் உள்ள குளத்தில் தாமரையினுல்கட்டுண்டுஅழுங்குதல் உவமை.குடங்கை-உள்ளங்கை.

36. (1 - 18) அருவி வருணனை : (3) ஓசனித்து - சிறகுகளையடித்து; 'உடைதிரை முத்தஞ் சிந்த வோசனிக் கின்ற வன்னம்'

ஓதுக்குபு குழுமி யோசனித் தெழுந்து
துழனியிட் டுயரிய பழமுதிர் கோட்டுக்
குடம்பையி னுழையா வடங்குபு துயிலும்
இருஞ்சிறை நெடுங்காற் பெருங்குரு கிரியத்
தாய்க்குதித் தடிக்குந் தழல்விழி வேங்கை
மதகிரி யுடைக்குஞ் சுதைக்கண் டீரவம்
சூகரஞ் சல்லியஞ் சுடர்மதிப் போழிற்
குலவிய வுகிரின் குடாவடி புல்வாய்
கவையமோ டேனவுங் கவன்றெழுந் தோட
வருக்கையின் கனிகீண் டுருக்கிளர் சுளைகள்
எடுத்தெடுத் திரட்டைக் கவுட்புறத் தடைக்கும்
கருமுக மந்தி யிருகையிற் றமாலம்
நெருங்கிய சாகை மருங்குறப் பிடித்துக்
குண்டுகண் மூடித் தண்டாது நால
இழுமென விசைத்து விழுதரு மருவியிற்
றேணியிற் றவழ்ந்து துண்டவெண் மதியங்
குரவம் பயந்த மருவம் பாவையைக்
கதிரெனுங் கரத்தி னிதமுறத் தழுவும்
கன்னியம் பொதும்பர் மன்னிய சூழலிற்
றும்பிவெண் கோட்டிற் சூழ்ந்தவே லியினுட்
கருங்கலிற் குழித்த பெருங்கறை வாயிற்
பெய்துநுண் டினையோ டைவனங் களிற்று
மருப்புறண் முசலம் வளைக்கரத் தெயினப்
பாவைய ரோச்சப் பாய்ந்தரும் வேட்டை
எயினர்க ளாடு மெழிற்பரங் குன்றினும்
கருமுகி லடிவரை களிறெனச் சூழும்
அடுக்கன்மீ மீறிய வாவினன் குடியினும்

---

(**சீவக.** 2652.) 1 - 6: இரை மேய்ந்து தீர்த்து ஓதுக்குபு குழுமி ஓசனித்து எழுந்து இட்டு நுழையா அடங்குபு துயிலும் குருகு. (8) மதகிரி - யானை. கண்டீரவம் - சிங்கம். (9) சூகரம் - காட்டுப் பன்றி. சல்லியம் - முள்ளம் பன்றி. 9 - 10. கரடியின் உகிர்களுக்கு மதியின் பிளவு உவமை. (10) குடாவடி - கரடி. புல்வாய் - மான். (11) கவையம் - காட்டுப்பசு. கவன்று - கவலை கொண்டு. (12)

மீனமேற் றுவி வானமீ னலைக்கும்
பொய்கைக ளருகிற் பொலியவீற் றிருக்கும்
சீரகத் தோர்தொழு மேரகக் குன்றினும்
அரம்பைநெட் டிலைக ளரங்கினி லாடும்
அரம்பையர் முன்னின் றுடுபு பழிக்கும்
மன்றலஞ் சோலைக் குன்றுக டோறும்
முன்றினின் றமரர் முடிகொடுத் தாடும்
ஒல்லெனு மோதை யுயரிய வருவிப்
பழமுதிர் சோலை யொழுகிய மலையினும்
வளமையி னிருந்து வரம்பல வுதவும்
உலகினி லிரண்டாந் தலமென வுரைக்கும்
சீரலை வாயிற் றெய்வதக் கொழுந்தே
மண்ணகத் தோர்தொழும் புண்ணிய முதலே
விண்ணகத் தோர்தம் விழுக்குலம் விளங்கும்
கண்ணுறு மணியே கருமணிச் சுடரே
மீன்முலை யருந்தி வீசிய திரையிற்
கொக்கினை யவிக்குங் குறக்குலக் கன்னி
காந்தளு யினுநின் கான்மல ரன்றி
ஏந்திய பூங்கச் சிளமுலை மாதர்
முயக்கொழி யாதென முன்னின னீதே

---

வருக்கை - பலாக்கனி (14) தமாலம் - பச்சிலை மரம். (16) நால - தொங்க. 'குருகுஇரிய, வேங்கை, கண்டீரவம், குவரம் சல்லியம் குடாவடி புல்வாய் கவையமோடுஏனவும் ஓட, மந்தி நால இசைத்து விழுதரும் அருவி' என்க.

(18) தோணியின் - தோணியைப் போல; துண்ட வெண்மதியம் - பிறை; பிறைக்குத் தோணி உவமை: 'வியன் கங்கை பொங்கி, வருநீர் மடுவுண் மலைச்சிறு தோணி வடிவின் வெள்ளைக் குருநீர் மதிபொதியுஞ் சடை வானக் கொழுமணியே' (திருவா. நீத்தல். 26.)

(23) கறை வாயில் - உரலின் கண். (25) முசலம் - உலக்கை. (30) மீனம் - மீன்கள். (33) அரம்பை நெட்டிலைகள் - வாழையின் நீண்ட இலைகள். (33 - 4) வாழையின் ஆட்டம் அரம்பை மாதரின் ஆடலுக்கு உவமை. (36) முடிகொடுத்து வணங்கி என்ற

மறவா திருக்க வரந்தரு வாயேற்
கதமெழரிக் குண்டுகட் கயவாய்ப் பனையின்
போழ்நெடுங் கோட்டுப் புங்கநீ ளெருமை
வெரிந்புறத் திவர்ந்து வீசிடு பாசம்
குடங்கையிற் பிடித்தெரி குஞ்சிமே லிலங்க
இதழ்மடித் துறுக்கி யெரிவிழி யுருக்கப்
பிடிபிடி யெனத்தன் பின்வருந் தூதினை
இடியிடித் தனைய கடுமொழி யுரைக்கும்
வன்கொலை யியமன்முன் புன்கணுற் றிடினும்
பிறப்பினிற் புழுங்கினு மிறப்பினி லழுங்கினும்
எய்தாப் பெரும்பொரு ளெய்திட மறிந்தோன்
எய்திடக் கால மியன்றில தேனும்
எங்ஙன மேனு மெய்துவ லென்னும்
திடநனி யுறுதலிற் சிறியனும்
அடர்பய நிச்சய மாகவொன் றிலனே.

---

படி. (40) இரண்டாம் தலம் - ஆறுபடை வீடுகளின் முறை வைப்பில் இரண்டாவதாக உள்ள தலம். (45) மீன் - கிருத்திகை மாதர். (46 - 7) கொக்கினை அவிக்கும் - மாவுருவாயிருந்த சூரனை அழிக்கின்ற; 'கொக்குகளை நெருப்பில் அவிக்கின்றகுறக்குலம்' என்பது ஆற்றலாற் போந்த பொருள். குறக்குலக் கன்னி காந்தன் என்றது முருகன் என்ற அளவாய் நின்றது.

(51) கயவாய் - குளம் போன்ற வாயையும். பனையின் போழ் நெடுங்கோட்டு - பிளந்த பனந் துண்டங்களைப்போன்ற மருப்பினையும் உடைய (58) புன்கண் - துன்பம். (63) உறுதலில் - அடைதலைப் போல.

முடிபு : பரங்குன்றினும் 72, ஆவினன் குடியினும் 29, ஏரகக் குன்றினும் 32, குன்றுதோறும் 35, மலையினும் 38, இருந்து உதவும் சீரலைவாயிற் கொழுந்தே 39 - 41, முதலே 42; மணியே சுடரே 44, முன்னினன் ஈதே 49. தருவாயேல் 50, புன்கண் உற்றிடினும் 58, புழுங்கினும் அழுங்கினும் 59, அறிந்தோன் 60, உறுதலிற் சிறியனும் நிச்சயமாகப் பயம் ஒன்றிலன் 63 - 4.

வெண்பா

(37) ஒன்றாய்ப் பலவா யுயிர்க்குயிராய் நின்றருளுங்
குன்றே திருச்செந்திற் கோமானே—ஒன்றிற்
பிணியிலா வாணவநோய் பெற்றவடி யேனுட்
பிணியுற்ற வாறென்னை பேசு.

கட்டளைக் கலித்துறை

(38) பேசார் மதிகெடுந் தீயவை மாரன் பெருங்கணைக்குக்
கூசார் திருவடித் தாமரைப் போதன்றிக் கூடல்செய்யார்
தேசா ரிருஞ்செந்தில் வேலோயென் பாரவர் சேவடியை
மாசாரு நெஞ்சக மேதொழு தால்வரும் வான்கதியே.

விருத்தம்

(39) கதிர்மணி கொழுதிப் பூந்திரை சுருட்டுங்
கவின்றரு செந்திலம் பதியில்
நதிமதி முடியோன் மதலையைக் காணி
னலநுகர் தருநம ரங்காள்
அதிர்கடற் றுயில்வோன் முதலிய வமர
ரனுதினங் காண்குவர் ஞான
நிதிதரு மன்னோற் பழிச்சிடிற் றுதிப்பா
ரிவைசெய நினைமினித் தனுமே.

---

37. ஒன்றிற்பிணியிலா - ஒன்றிலும் ஒட்டாத. பிணியுற்றவாறு - நீ கட்டப்பட்ட விதம்.

38. தீயவை பேசார். மாசு ஆரும் - குற்றம் பொருந்திய. அடியவர் சிறப்பு இதனாற் கூறப்பட்டது.

39. மதலை - பிள்ளை. மதலையை நாம் காணின் அமரர் நம்மைக் காண்பார்; அவனை நாம் பழிச்சிடில் அமரர் நம்மைத் துதிப்பார்.

ஆசிரியப்பா

(40) நினைதொறு நினைதொறு நீங்குதற் கரிதாய்
இதனினும் வேறொன் றின்பமு முளதோ
எனத்தின மருட்டு மிளமுலைக் கருங்குழல்
மதரரிக் கண்மட வார்களு மவரிற்
றனித்தனி மருட்டுந் தரையொடு பொன்னும்
கலுழனைக் கண்ட கட்செவி போலக்
காண்டொறுங் காண்டொறு மீண்டிய வச்சக்
கருத்தின ராகிக் கனவினு நினையா
தகஞ்சில நுழைந்தாங் கையமேற் றுண்டு
காய்பசி யகற்றிக் கண்டுழித் துயிலா
இயன்றதோர் சீரை யிடையினிற் சுற்றிச்
சமயா தீதச் சைவசித் தாந்தக்
குருபரம் பரையி லிடையறு தியலும்
ஞானமே வழியா நடந்திரு விழியும்
ஆறுப் பெருமழை யாறுகொண் டுயரிய
வெள்ளியங் கிரியிற் றுள்ளிவீ ழருவி
போன்மென வெள்ளிய பூதிகொண் மேனியிற்
பரந்தெழுந் தோடத் தளர்நடை நடந்துநின்
சந்நிதி யெய்தி முன்செய றெரியா
தன்பெனு மாழி யலையினிற் பட்டுக்
குனித்தலும் புரளலுங் கூப்பிநின் றேத்தலும்
விழுதலு மெழுதலு மீடலுஞ் சேறலும்
அசைதலு மாற்றலு மன்றிவே றெவையும்
பல்கா லியற்றி யல்காக் கருணை

---

**40**. (1 - 25) அடியவர் தொழில் கூறப்படுகிறது :

(4) அவரின் - அம்மகளிரைப் போல. (6) கலுழன்-கருடன். பசியின் அளவுக்கே ஐயம் வேண்டுதலின் 'அகம் சில" என்றார். (17) பூதி - விபூதி. (53) அன்றி வேறு எவையும் - இவைகளே அன்றி அன்பைப் புலப்படுத்தும் வேறு எவையும். (26) ஒருவாது-நீங்காமல்.

வாரியின் மூழ்குஞ் சீரிய வடியார்
ஓவா திருக்கு நாவாய்க் கருங்கடல்
அருகுவீற் றிருக்கு முருகவிழ் சோலைச்
செந்திலம் பதியிற் றெருண்டோ ரன்றி
என்போ லியர்களு மிணையடிப் போதின்
வாழிய வுவகையின் வளம்பெற விருக்கும்
சரவண பவனே சண்முகா முருகா
விசாகா கடம்பா வேலுடைக் கடவுள்
உரைத்தவிவ் வடியார் தரிசன மன்றி
அறிவுசற் றில்லாச் சிறியேன் றனக்கு
வரிசைவே றுளதோ மன்ற
புரிபுலால் யாக்கை பொறுத்தவிப் புவிக்கே.

திருச்சிற்றம்பலம்.

---

முடிபு : மடவார்களும் 4, தரையொடு பொன்னும் 5, கனவிலும் நினையாது 8, உண்டு 9, அகற்றி, துயிலா 10, சீரை சுற்றி 11, நடந்து 14, ஓட நடந்து 18, எய்தி 19, அன்றிவேறு எவையும் இயற்றி 23 - 4, மூழ்கும் அடியார் ஓவா திருக்கும் பதியில் 25 - 8, இருக்கும் சரவணபவனே.....கடவுள் 30 - 32, சிறியேன் தனக்கு 34, அன்றி 33 வேறுளதோ 35.

# திருச்செந்தூர் நான்மணி மாலையின் செய்யுள் முதற்குறிப்பகராதி

எண்—பக்க எண்

# அனுபந்தம்

**தமிழ்க்கல்வி, சைவசித்தாந்தம், தேவாரத் திருமுறைகள், இசைத்தமிழ், அன்னதானம், படிப்பு, வைத்தியம் இவற்றின் அபிவிருத்திக்காகவும் பொதுஜன அனுகூலத்துக்காகவும்**

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துத் தலைவர்களாக இருபதாம் பட்டத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

**அருணந்தித் தம்பிரான் சுவாமிகளவர்கள்**

மனமுவந்தமைத்திருக்கும்

## பேரறக் கட்டளைகள்

——: :——

*I.* ஸ்ரீ அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் சிவ ஞான சித்தியார் உபந்நியாசக் கட்டளை. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத்தம்பிரான் சுவாமிகளவர்கள் ஞாபகார்த்தமாக 1944 ஆம் வருஷம் ஏற்படுத்தியது. அண்ணாமலை சர்வகலாசாலையாருடைய அங்கீகாரம் பெற்றது. இதன் மூலதனம் ரூ. 15.000; சர்க்கார் கடன் பத்திரமாகவுள்ளது.

2. இதன் வட்டித் தொகையிலிருந்து அலகபாத்து சர்வகலாசாலையிலும், காசி ஹிந்து சர்வகலாசாலையிலும் இந்தக் கட்டளையை ஏற்படுத்தியவர்களுடைய சம்மதத்தின் பேரில் வேறு சர்வகலாசாலைகளில் உபந்நியாசங்கள் செய்ய மாற்றினாலன்றி ஆண்டுதோறும் நான்குக்குக் குறையாத உபந்நியாசங்கள் செய்பவருக்கு ரூ 400 சம்மானம் ரொக்கமாகவோ உண்டியல் மூலமாகவோ அளிக்கவேண்டும். சம்மானத்தொகைபோக மிஞ்சுவதை மூலதனத்தோடு சேர்க்க வேண்டும்.

3. எந்த வருஷத்திலேனும் உபந்நியாசம் செய்யத் தகுதியுள்ளவர்கள் இல்லையென்று கருதினால் அந்தக்காரணத்தைக் கொண்டு கொடுபடாமல் நிற்கும் சம்மானத் தொகை மூலதனத்தோடு சேர்க்கப்படவேண்டும்.

4. நான்கு உபந்நியாசங்களுள் மூன்று காசி ஹிந்து சர்வ கலாசாலையிலும் ஒன்று அலகபாத் சர்வகலாசாலையிலும் சர்வகலா சாலையார் குறிப்பிடும் இடங்களில் செய்யவேண்டும்.

5. அண்ணாமலை சர்வகலாசாலையின் விண்டிகேட்டார் தம் சர்வகலாசாலையிலுள்ள ஹிந்து ஆசிரியர்களையோ சைவ சித்தாந்த சாஸ்திரத்தில் நல்ல பயிற்சியுள்ள வேறு ஹிந்துக்களையோ உபந் நியாசகராக ஆண்டுதோறும் நியமிப்பார்கள். உபந்நியாசகர் எந்த ஜாதியினராகவோ ஆண்பாலராகவோ பெண்பாலராகவோ இருக் கலாம். உபந்நியாசம் சைவசித்தாந்தத்தின் கொள்கைகளை நன்றாக விளக்கக்கூடியதாகவும் சிவஞான சித்தியார் பரபக்கம் சுபக்கம் இவற்றின் சூத்திரங்களிலும், இவற்றிற்குரிய அறுவர் உரைகளிலும் ஸ்ரீ உமாபதி சிவாசாரியாருடைய சிவப்பிரகாசத் திலும் ஆழ்ந்த பயிற்சியும் ஆராய்ச்சியும் இருத்தலைக் காட்டக் கூடியதாகவும் இருக்கவேண்டும். ஒருமுறை உபந்நியாசம் செய் தவர் 12 ஆண்டுகளுக்குப் பிறகே மறுமுறை உபந்நியாசம் செய்ய வரலாம்.

6. காசி ஹிந்து சர்வகலாசாலையாரையும், அலகபாத்து சர்வகலாசாலையாரையும் கலந்துகொண்டு தசரா விடுமுறைக்குப் பின்போ முன்போ உபந்நியாசங்களை நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும். உபந்நியாசங்கள் செய்த ஒரு மாதத்துக்குள் உபந்நியா சங்களை அண்ணாமலை சர்வகலாசாலையாருக்கும் இந்தக் கட்டளையை ஏற்படுத்தியவர்களுக்கும் அவர்களுப்பின் உரிமையுடையவர்களுக் கும் அனுப்பவேண்டும். விண்டிகேட்டாருடைய நோகம்போல் சர்வ கலாசாலையார் இந்த உபந்நியாசங்களை அச்சிட்டு வெளியிடலாம்

7. உபந்நியாசங்களை முடித்துவிட்டு உபந்நியாசகர் திரும் புகையில் சிதம்பரத்திலுள்ள ஸ்ரீ நடராஜமூர்த்தியின் அபிஷேகத் துக்காக ஒரு குடம் கங்காதீர்த்தத்தைக் கொண்டுவருவதோடு அந்த விவரத்தை இந்தத் தரும ஸ்தாபகரவர்களுக்கு உபந்நியாசப் பிரதியை அனுப்பும்போது தெரிவிக்கவேண்டும்.

8. ஒவ்வொரு வருஷ முடிவிலும் உபந்நியாசகருடைய பெயரையும் விலாசத்தையும் சம்மானத் தொகையையும் எந்த ஆண்டிலேனும் உபந்நியாசம் நடைபெறாவிட்டால் சேரும் தொகை யையும் விண்டிகேட்டார் இந்தத் தர்மஸ்தாபகரவர்களுக்குத் தெரி விக்கவேண்டும். கணக்குகளைப் பிரபலமான தினசரி ஆங்கிலப்பத்

திரிகைகளிலோ தமிழ்ப் பத்திரிகைகளிலோ பிரசுரிக்கவேண்டும். வருஷந்தோறும் மிஞ்சும் தொகையையும், இப்போது வட்டிக்குக் கொடுத்திருக்கும் மூலதனத் தொகையை ஒருவேளை கவர்ன்மெண்டார் திருப்பிக் கொடுத்தால் அதையும் சேர்த்து அண்ணாமலை சர்வ கலாசாலையின் ஸிண்டிகேட்டார் வேறு நம்பிக்கையான இனங்களில் வட்டிக்கு விடவேண்டும். வட்டிக்கு விடுவதில் மதிப்பு அதிகமாகி அதிக வருமானம் ஏற்பட்டால் வேறு சர்வகலாசாலை ஸ்தலங்களில் உபந்நியாசங்களை ஏற்படுத்தி அவற்றிற்குச் சம்மானம் அளிக்க அந்த வருமானத்தை உபயோகிக்கலாம்.

*II* ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளவர்கள் ஞாபகார்த்தமாகக் கும்பகோணம் முனிஸிபல் எல்லைக்குள் கொட்டையூரில் ஒரு லோயர் ஸெகண்டரி பாடசாலை. இதற்காக 1945 பிப்ரவரியில் ஏற்படுத்திய மூலதனம் ரூ. 11,500. இதில் ரூ. 10,000 3½ சதவீதம் வட்டியுள்ள சர்க்கார் கடன் பத்திரமாகவும் ரூ. 1500 ரொக்கமாகவும் உள்ளன.

முதல் மூன்று பாரங்களையோ, அவற்றிற்குச் சமமான வகுப்புகளையோ கொண்ட ஒரு பாடசாலையை நடத்தக் கும்பகோணம் நகர பரிபாலன சபையார் வசம் ரூ. 10,000 இருக்கும். அவர்கள் அதன் வட்டியைக்கொண்டு பாடசாலையை நடத்தவேண்டும். இந்தத் தொகையை வேறு காரியத்துக்கு உபயோகிக்கலாகாது.

2. ரொக்கமாகவுள்ள ரூ. 1500-ஐ முனிஸிபாலிடியார் பள்ளிக்கூடம் கட்ட ஒரு மனையை வாங்க உபயோகிக்கவேண்டும். பள்ளிக்கூடம் அந்தக் கட்டிடத்தில் நடைபெற வேண்டும்.

3. பள்ளிக்கூடத்து வருஷ நிர்வாக அறிக்கையை முனிஸிபாலிடியார் திருப்பனந்தாள் காசிமடத்து ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்களுக்கு அனுப்பவேண்டும். ஜாஸ்தி வட்டி வரக்கூடிய நம்பிக்கையான நல்ல இனத்தில் இந்த மூலதனமாகிய ரூ. பதினாயிரத்தையும் போட்டுவைக்க நகர பரிபாலன சபையாருக்கு அதிகாரமுண்டு. பாடசாலை செவ்வனே நடந்து வருகிறது.

*III.* திருவாங்கூர் மஹாராஜா அவர்கள் தேவாரப்பரிசு.

1. தேவாரத்தில் நல்ல பயிற்சியும் தேர்ச்சியும் திருவாங்கூர் ராஜ்யத்திற் பரவும் பொருட்டு இப்பரிசு 1946 ஏப்ரல் மாதத்

தில் திருவாங்கூர் மஹாராஜா அவர்கள் பெயரால் ஏற்படுத்தப் பெற்றது. இது திருவாங்கூர் சர்வகலாசாலையாருடைய அங்கீகாரம் பெற்றுள்ளது ; 8-4-1946.

2. இதன் மூலதனம் ரூ. 5,000 நூற்றுக்கு $3\frac{1}{2}$ சதவீதம் வட்டி வரக்கூடிய சர்க்கார் கடன் பத்திரமாகத் திருவாங்கூர் சர்வகலாசாலையாருடைய பரிபாலனத்தில் இருந்துவரும். இதன் வட்டியிலிருந்து வருஷந்தோறும் தேவாரத்தை மிகவும் திறமையாக ஓதும் ஒருவருக்கு ரூ. 100 அளிக்கப்படும்.

3. நான்கு வருஷங்களுக்கு ஒருமுறை சர்வகலாசாலையார் மூவர் தேவாரங்களிலிருந்து பண்கள் எல்லாம் விரவியிருக்கும்படி 75 தேவாரங்களைப் பொறுக்கியெடுத்து அரும்பதவுரையுடன் ஒரு புத்தக வடிவில் அச்சிட்டு வெளியிடச் செய்து பரிசுப் போட்டிக்கு வருபவர்களுக்கு அப்பிரதிகளை இலவசமாக வழங்கவேண்டும். அடுத்த நான்கு வருஷங்களுக்காக இவையல்லாத வேறு 75 தேவாரங்களைப் பொறுக்கி இவ்வாறு வெளியிட்டு வழங்கவேண்டும். பரிசுத்தொகை போக வட்டியில் மிஞ்சும் தொகையை இப்பதிப்புக்கு உபயோகிக்கலாம்.

4. திருவாங்கூர் சர்வகலாசாலைக்குச் சம்பந்தப்பட்ட காலேஜ்களில் படிப்பவர்கள் ஜாதி பேதமின்றி ஆண்பாலராயினும் பெண்பாலராயினும் பொறுக்கி எடுத்த 75 தேவாரங்களையும் உரிய பண்களில் இசையோடு ஒப்பிக்கக்கூடியவர்களே பரிசுப் போட்டிக்கு வரத்தகுதியுள்ளவர்கள்.

5. எந்த வருஷத்திலேனும் இருவரோ மேற்பட்டவர்களோ பரிசுபெறத் தகுதியுடையவர்களென்று கருதப்பட்டால் திருவுளச்சீட்டுப் போட்டு யார் பெயர் அகப்படுகிறதோ அவருக்கே பரிசை வழங்கவேண்டும். சர்வகலாசாலையின் பட்டமளிப்பு விழாவில் பரிசு வழங்கப்பெறும். பரிசு பெறுகிறவர் அச்சமயம் வாராவிட்டால் அவர் விலாசத்துக்குப் பரிசுத் தொகையைச் சர்வகலாசாலையார் அனுப்பிவிடலாம். பரிசு பெறவேண்டியவர் பரிசு பெறுவதற்குமுன் காலஞ்சென்றுவிட்டால் பரிசுத் தொகை அவருடைய சட்ட பூர்வமான வார்சுக்குச் சேர்ப்பிக்கப்படும். ஒருமுறை பரிசு பெற்றவர் மறுமுறை பரிசுப்போட்டிக்கு வர அருகரல்லர்.

6. எந்த ஆண்டிலேனும் ஒருவருக்கும் பரிசு வழங்காவிட்டால் அத்தொகை மூலதனத்தோடு சேரும். எப்போதேனும் மூலதனத்தோடு சேரும் தொகை அதிகரித்தால் சர்வகலாசாலையார் உசிதப்படி பரிசுத்தொகையை அதிகப்படுத்தவோ அதிகமான பரிசுகளை வழங்கவோ ஏற்பாடு செய்யலாம். ஒவ்வொரு வருஷத்திலும் பரிசு பெறுபவருடைய பெயரையும் விலாசத்தையும் இந்தத் தரும ஸ்தாபகரவர்களுக்கும் அவர்களுடைய வார்சுகளுக்கும் தெரிவிக்க வேண்டும்.

*IV.* சேரமான் பெருமாள் தேவாரப் பரிசு. கோச்சி கவர்ன்மேண்டாருடைய அங்கீகாரம் பெற்றது. 21-1-1947.

கொச்சிராஜ்யத்தில் சுந்தரமூர்த்தி நாயனருடைய தேவாரத்தில் பயிற்சியும் தேர்ச்சியும் பரவும் பொருட்டுச் சேரமான் பெருமாள் நாயனர் பேரால் நிறுவப்பெற்றது.

2. இதன் மூலதனம் ரூ. 5,000. கொச்சி அரசாங்கத்தார் நியமிக்கும் ஒரு சபையார் இதனைப் பரிபாலிப்பர். இச்சபையில் காலேஜ் தலைவர்கள் இருப்பார்கள். அந்த ராஜ்யத்தின் கல்வியிலாகா தலைமையதிகாரியே இச்சபைக்குத் தலைவராக இருப்பார். இச்சபையார் மூலதனத்தை வட்டி அதிகமாக வரக்கூடிய இனங்களில் அவ்வப்போது போடலாம். அந்த வட்டித் தொகையிலிருந்து மிகவும் திறமையாகத் தேவாரம் ஓதும் ஒருவருக்கு ஆண்டுதோறும் ரூ 100 ரொக்கமாக வழங்கப்பெறும்.

3. நான்கு வருஷங்களுக்கு ஒருமுறை இச்சபையார் சுந்தரர் தேவாரத்திலிருந்து பண்களெல்லாம் அமைந்த 50 பாசுரங்களைப் பொறுக்கியெடுத்து அரும்பதவுரையோடு புத்தக ரூபமாக அச்சிட்டு வெளியிடவேண்டும். பொறுக்கியெடுக்கும் பாசுரங்கள் நான்கு வருஷங்களுக்கு ஒருமுறை மாறும். ஆனாலும் ஒவ்வொரு தடவையிலும் 'பித்தா'. 'தானெனை' என்னும் பாசுரங்கள் தவறாமல் சேர்ந்திருக்கவேண்டும். பரிசுத் தொகைபோக வட்டியிலிருந்து மிஞ்சும் தொகையைப் பதிப்புச் செலவிற்கு உபயோகிக்கலாம்.

3. காலேஜில் படிக்கும் ஹிந்துக்களே ஆண்பாலராயினும் பெண்பாலராயினும் பரிசுப் போட்டிக்கு வரலாம். ஐம்பது தேவாரப்பாசுரங்களையும் நல்ல இசையோடு பாராமல் ஒப்பிக்கக்கூடியவர்களே போட்டிப் பரீக்ஷைக்கு வர உரியவர்கள். பொறுக்கிப்

பதிப்பித்த தேவாரப் பிரதிகள் இவர்களுக்கு இலவசமாக வழங்கப் பெறும். மேலே குறிப்பிட்ட சபையாரே பரீக்ஷையை நடத்து வார்கள்.

4. பரீக்ஷை இரண்டு பிரிவுகளையுடையது ;(1)50 தேவாரப் பாசுரங்களையும் பாராமல் ஒப்பித்து அவற்றின் பொருளையும் கருத்தையும் தெரிவித்தல் ; இதற்குரிய அம்சம்-50 ; (2) 50 பாசுரங்களிலிருந்து குறிப்பிடும் எவற்றையேனும் நல்ல இசை யுடன் உரிய பண்களில் பொருள் நன்கு விளங்கும்படி பாடுதல்; இதற்கு உரிய அம்சம்-50. எவர் அதிக அம்சங்களைப் பெறு கிறாரோ, அவரே பரிசுக்கு உரியராவர்.

5. எந்த ஆண்டிலேனும் இருவரோ மேற்பட்டவர்களோ பரிசுக்குரியவர்கள் என்று கருதப்பெற்றால் திருவுளச்சீட்டுப் போட்டு அதில் எவர் பெயர் அகப்படுகிறதோ அவரே பரிசுக்கு உரியவரென்று நிச்சயிக்கப்படுவர். ஒருமுறை பரிசு பெறுபவர் மறுமுறை பரிசுப்போட்டிக்கு வர உரியவரல்லர்.

6. திருவஞ்சைக்களத்திலுள்ள சிவாலயத்தில், சுந்தரர் சேரமான் பெருமாள் சன்னிதியில் ஆடிச் சுவாதி விழா நடக்கை யில் பரிசு வழங்கப் பெறும்.

7. எந்த வருஷத்திலேனும் பரிசுக்குரியவர் நேரில் வர முடியாவிட்டால் அவருடைய இருப்பிடத்திற்குப் பரிசுத் தொகை அனுப்பப்படும். பரிசுக்குரியவர் பரிசு பெறுவதற்கு முன் இறந்து விட்டால் அவரது சட்டபூர்வமான வார்சுக்குப் பரிசுத் தொகை அனுப்பப்படும்.

## V. மூவர் தேவாரப் பரிசு.

இதற்கு ஏற்படுத்திய மூலதனம் ரூ. 10,000. இது சர்க்கார் ஜாமீன் பத்திரமாகவுள்ளது. இதன் பரிபாலனம் திருப்பனந் தாளிலுள்ள செந்தமிழ்க் கல்லூரியின் நிதியை நிர்வகிக்கும் கமிட்டி யார் வசம் இருக்கும்.

தமிழ் நாட்டில் பல அற்புதச் செயல்கள் புரிந்து பக்திச் சுவையைப் பரப்பிய மூவருடைய தேவாரங்களிலும் நல்ல பயிற்சி யையும் தெய்வ பக்தியையும் மக்களிடையே உண்டாக்கி அவர்களை நன்மக்களாகச் செய்வதற்கே இப்பரிசு அமைக்கப்பெற்றது.

2. வருஷந்தோறும் கிடைக்கும் வட்டித்தொகையிலிருந்து சீகாழி, திருவாரூர், திருவையாறு, திருப்பனந்தாள் என்னும் ஊர்களிலிருந்து பரிசு பெறுபவர் நால்வருக்கு ஒவ்வொருவருக்கும் ரூ. 50 வீதம் அளிக்க ரூ. 200 உபயோகிக்கப்படும். எஞ்சிய வட்டித்தொகையைத் தேவாரத்திரட்டை அச்சிடுவது முதலிய செலவுகளுக்கும், பரிசுக்காக முதல் மூன்று ஊர்களிலிருந்து வருபவர்களுடைய பிரயாணச் செலவுக்கும் உபயோகிக்கவேண்டும். செலவாகாமல் மிஞ்சும் தொகையை மூலதனத்தோடு சேர்க்கவேண்டும்.

3. சீகாழி, திருவாரூர், திருவையாறு என்னும் ஊர்களிலுள்ள ஹைஸ்கூல்களில் 4.5, 6-ஆம் பாரங்களிலோ அவற்றிற்குச் சமமாக அமைக்கப்படும் வேறு வகுப்புக்களிலோ படிப்பவர்களும், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் யுனிவர்சிடி பரீக்ஷைக்காகப் படிப்பவர்களும் இப்பரிசுப்போட்டிக்கு வரத்தகுதியுள்ளவர்கள். ஜாதி வேற்றுமையின்றி, ஆண்பாலாரும் பெண்பாலாரும் போட்டிக்கு வரலாம். கமிட்டியார் வெளியிடும் புஸ்தகத்திலுள்ள தேவாரங்களிலிருந்து பதிகம் ஒன்றுக்குக் குறைந்தது ஒரு பாசுரம் வீதம் ஒவ்வொருவர் தேவாரத்திலிருந்தும் 15 பாசுரங்களுக்குக் குறையாமல் மொத்தம் 50 பாசுரங்களை மனப்பாடம் பண்ணிச் சரியான பண்ணோடு நல்ல இசையில் தாத்பரியம் விளங்கும்படி பாடவேண்டும்.

4. பரிசுக்குரிய விதிகள் வருமாறு :

(a) அபேக்ஷகர்கள் விண்ணப்பங்களைத் தத்தம் கலாசாலைத் தலைமையாசிரியர் மூலம் ஜுலை மாதம் 31-ம் தேதிக்குள் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி பிரின்ஸிபாலவர்களுக்கு அனுப்பவேண்டும்.

(b) சீகாழி, திருவாரூர், திருவையாறு, திருப்பனந்தாள் என்னும் ஊர்களில் உள்ள கலாசாலையதிகாரிகள் தத்தம் கலாசாலைகளில் ஒரு பூர்வாங்கப் பரீக்ஷையை நடத்தி ஒரு கலாசாலையிருந்தால் மூவரையும் ஒன்றுக்கு மேற்பட்ட கலாசாலைகளிருந்தால் நால்வரையும் பொறுக்கியெடுத்து ஒவ்வொரு வருஷமும் டிசம்பர் மாதத்தில் குறிப்பிட்ட ஒரு தேதிக்குள் திருப்பனந்தாளுக்கு அனுப்பவேண்டும் செந்தமிழ்க் கல்லூரியின் பிரின்ஸிபாலும், கமிட்டியாரால் நியமிக்கப்படும் அவருடைய உதவியாசிரியர்கள் இருவரும் சேர்ந்து பொறுக்கி அனுப்பப்பட்டவர்களுக்கு முடிவுப்

பரீக்ஷையை நடத்திப் பரிசுக்குத் தகுதியுள்ள சிறந்தவர் ஒருவரை ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் தீர்மானிப்பர்.

(c) செந்தமிழ்க் கல்லூரி மாணவர்களுக்கு முடிவுப் பரீக்ஷையை நடத்த நியமிக்கப்படும் உதவியாசிரியர் இருவரும் பூர்வாங்கப் பரீக்ஷைக்கு நியமிக்கப்பட்டவரல்லாத அன்னியராக இருக்கவேண்டும்.

(d) ஒருமுறை பரிசு பெற்றவர் மறுமுறை பரிசுப்போட்டிக்கு வர அருகரல்லர்.

(e) செந்தமிழ்க் கல்லூரியின் பிரின்ஸிபால் தருமஸ்தாபகரவர்களுக்கும் அவர்களுடைய வார்சுகளுக்கும் பரீக்ஷையின் முடிவுகளைத் தெரிவிக்கவேண்டும்.

(f) தேர்ந்தெடுக்கப்பட்ட அபேக்ஷகர்கள் ஏதேனும் ஒரு காரணத்தால் முடிவுப் பரீக்ஷைக்காகத்திருப்பனந்தாளுக்கு வரத்தவறினால் பரிசுத்தொகையை மூலதனத்தோடு சேர்க்கவேண்டும்.

5. பரிசு பெறுவோருக்கு உரிய தொகையை அவர் பெயரால் உண்டியல் மூலம் கமிட்டியார் சம்பந்தப்பட்ட அவ்வக் கலாசாலையதிகாரிகளுக்கு அனுப்புவார்கள்.

6. சீகாழி, திருவாரூர், திருவையாறு என்னும் ஊர்களிலிருந்து போட்டிக்கு வருபவர்களுக்கு (ஒரு கலாசாலையிருந்தால் மூவருக்கும் ஒன்றுக்கு மேற்பட்டவை இருந்தால் நால்வருக்கும்) திருப்பனந்தாள் வந்து போவதற்குரிய செலவுக்காக ஒவ்வொருவருக்கும் 4 ரூபாய் வீதம் அளிக்கப்படும்.

7. மூலதனத்தின் வரவு செலவுகளுக்குக் கமிட்டியார் ஒழுங்கான கணக்கு வைத்திருக்கவேண்டும். பரிசுத் தொகைகளும், வெளியூரிலிருந்து வந்து போவோருக்கு உரிய பிரயாணச்செலவுகளும் கொடுத்த பிறகு மிஞ்சும் தொகையைக்கமிட்டியார் பரிசுக்கு வருவோருக்கு உதவுவதற்காக மூவர் தேவாரங்களிலிருந்தும் பொறுக்கி யெடுக்கும் பாசுரங்களைப் புத்தகவடிவில் அச்சிடுவதற்கு உபயோகிக்கலாம்.

ஒவ்வொரு வருஷத்திலும் பரிசு பெறுவோர் பெயர்களையும் அளித்த பரிசுத் தொகையையும் பிரபலமான இங்கிலீஷ் தமிழ்ச்

தினசரிகளில் வெளியிடவேண்டும். வருஷத்து வரவு செலவு முழுதும் அடங்கிய கணக்கு தருமஸ்தாபகரவர்களுக்கும் அவர்களுடைய வார்சுகளுக்கும் சேர்ப்பிக்கப் படவேண்டும.

*VI.* காசி ஹிந்து சர்வகலாசாலைக்கு அளித்த சைவசித்தாந்தக் கட்டளை மூலதனம் ரூ. 60,000.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதி குமரகுருபர சுவாமிகள் ஞாபகார்த்தமாக, சைவசித்தாந்த சாஸ்திரத்தில் ஒரு பேராசிரியர் ஸ்தானத்தைக் காசியில் அமைப்பதற்காக 1946 ஜனவரி மாதத்தில் ஏற்பட்டது, இது காசி ஸர்வகலாசாலையாரால் 28-1-46ல் அங்கீகரிக்கப்பெற்றது.

1. இந்த மூலதனத்தை ஸர்வகலாசாலையார் $3\frac{1}{2}\%$ வட்டிவரக்கூடிய சர்க்கார்க் கடன் பத்திரங்களாகப் போட்டுவைக்கவேண்டும். இதன் பரிபாலனம் காசி ஹிந்து ஸர்வகலாசாலையாரைச் சேர்ந்தது.

2. எந்தச் சர்வகலாசாலையிலேனும் டிகிரி பெற்றுத் தமிழிலும் ஆங்கிலத்திலும் பயிற்சியுற்றுத் தமிழிலும் சைவசித்தாந்தத்திலும் ஆசிரியராக இருக்கத்தகுதியுள்ள ஒருவரைச் சர்வகலாசாலையார் ஷை ஸ்தானத்துக்கு நியமிக்கவேண்டும். அவர் சைவசித்தாந்தத்தில் அழுத்தமான பற்று உடையவராகவும் அதைப்பற்றிக் காலேஜ் மாணவர்களுக்குத் தமிழில் உபந்நியாசம் செய்யக்கூடிய திறமையுள்ளவராகவும் இருக்கவேண்டும்.

3. கட்டளைத் தொகையின் வருஷ வட்டியிலிருந்து இரண்டாயிரம் ரூபாய்க்கு மேற்படாத ஒரு தொகையைப் பேராசிரியருடைய சம்பளத்துக்காக உபயோகிக்கவேண்டும்.

4. சம்பளம் போக மிஞ்சும் வட்டித்தொகை மூலதனம் ஒரு லக்ஷம் ரூபாய் ஆகும்வரையில் மூலதனத்தோடு சேர்க்கப்படும். அதன் பிறகு சர்வகலாசாலையார் உசிதப்படி பேராசிரியரின் சம்பளத்துக்கு ரூ. 2,000 க்கு மேற்பட்ட தொகையை உபயோகிக்கலாம். அப்பாலும் தொகை மிகுதிப்பட்டால் சைவசித்தாந்த சாஸ்திர சம்பந்தமான புஸ்தகங்களைத் தமிழிலும், ஹிந்தியிலும், இங்கிலீஷிலும் அச்சிட்டுப் பிரதிகளை இலவசமாக எல்லாச் சர்வகலாசாலையாருக்கும் விநியோகிக்கலாம். ஷை நூலில் ஐந்து பிரதிகள் இந்தத் தர்மஸ்தாபகரவர்களுக்கும் அவர்கள் வார்சுகளுக்கும் அனுப்பப்பெறவேண்டும்.

எப்போதாவது சர்க்கார் கடன் பத்திரத் தொகையையும் பின் சேர்ந்த தொகையையும் திருப்பிக் கொடுத்தால் ஜாஸ்தி வட்டிவரக் கூடிய சர்க்கார் ஜாமீன் பத்திரங்களாக அவற்றை மாற்றிக் கொள்ளச் சர்வகலாசாலையாருக்கு உரிமையுண்டு.

5. வருஷந்தோறும் நடைபெற்ற வேலைகளின் விவரத்தையும் வரவு செலவு கணக்குகளையும் தர்மஸ்தாபகரவர்களுக்கோ அவர்களுடைய வார்சுகளுக்கோ அனுப்பவேண்டும்.

## VII ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதி குமரகுருபரஸ்வாமிகள் ஞாபகார்த்தச் சைவசித்தாந்தப் படிப்பின்சம்பள உதவிக் கட்டளை. அண்ணமலை ஸர்வகலாசாலை ஸிண்டிகேட்டாருடைய அங்கீகாரம் பெற்றது; 17—1—47

இதற்கு ஏற்பட்ட மூலதனம் ரூ 30.000. இதன் பரிபாலனம் அண்ணமலைச் சர்வகலாசாலையைச் சேர்ந்தது. அவர்கள் இந்தத் தொகையை வட்டிவரக் கூடிய சர்க்கார் ஜாமீன் பத்திரங்களிற் போடவேண்டும்.

அண்ணமலைச் சர்வகலாசாலையிற் படிக்கும் மாணக்கர்களுக்குக் கீழே கண்ட நிபந்தனைப்படி சம்பள உதவி அளிக்கப் பெறும்.

2. இதன் வட்டித் தொகையிலிருந்து அண்ணமலைச் சர்வகலாசாலையில் யோக்கியதையுள்ள ஏழை மாணவர் அறுவருக்கு ரூ 135 வீதம் (மாதந்தோறும் ரூ. 15-ஆக 9 தவணையில்) சம்பள உதவி ஜாதிமத வித்தியாசம் கருதாமல் ஆண்பாலாராயினும் பெண்பாலாராயினும் அளிக்கப்படும். சைவ சித்தாந்தப் புலவர் வகுப்பில் படிப்பவர்களுக்குச் சம்பள உதவிகள் நான்கு அளிக்கப்படும். மற்ற இரண்டும் காலேஜ் வகுப்பில் படிக்கும் மாணக்கர்களில் தமிழை இரண்டாம் பாஷையாகவும் சைவசித்தாந்த சாஸ்திரத்தை இஷ்டபாடமாகவும் எடுத்துக்கொண்டு படிப்பவர்களுக்கு அளிக்கப்படும்.

சம்பள உதவி செய்யும் முதல் வருஷத்தில் புலவர் வகுப்பிலுள்ள இருவருக்கும் காலேஜ் வகுப்பிற் படிப்பவர்களுள் சைவசித்தாந்த சாஸ்திரத்தை இஷ்டபாடமாக எடுத்துக்கொண்ட ஒருவருக்கும் உதவி அளிக்கப்படும். இரண்டாம் வருஷத்தில் இந்த உதவியைப் பெற இம்மாதிரி மூவர் தேர்ந்தெடுக்கப்பெறுவார்கள். இதனால் இரண்டாம் வருஷம் முதல், வருஷந்தோறும் பண உதவி

பெறுபவர் மேலே சொன்னபடி அறுவராவர். சம்பள உதவி இரண்டு வருஷங்களுக்கு உண்டு. அதற்கு மாணுக்கர்களுடைய முதல் வருஷப் படிப்பு திருப்திகரமாக இருப்பதோடு அவர்கள் இரண்டாம் வருஷத்திலும் படிக்க வரவேண்டும்.

3. பண உதவிபெறும் எந்த மாணுக்கரேனும் ஒழுங்கீனமாக நடந்தாலும், ஒழுங்காகப் பாடங்கேட்க வராவிட்டாலும், படிப்பில் தேர்ச்சியைக் காட்டாவிட்டாலும் அவரைப் பண உதவிக்குத் தகுதியற்றவரென்று அதை நிறுத்திவிட வைஸ்சான்ஸலருக்கு அதிகாரம் உண்டு. அவர் ஸ்தானத்தில் தகுதியான வேறு ஒரு மாணுக்கருக்கு இவ்வுதவி செய்யலாம். இவ்விஷயத்தில் வைஸ்சான்ஸலருடைய அபிப்பிராயமே முடிவானது.

4. எந்த வருஷத்திலேனும் பணவுதவி செய்யப்படாவிட்டாலும் சிலகாலம் கொடுத்த பின்பு மாணுக்கர் அதை இழந்துவிட்டாலும் செலவாகாத தொகையும் வட்டியின் மிகுதித் தொகையும் மூலதனத்தோடு சேர்க்கப்படும்.

5. எப்போதேனும் முதலில் ஏற்பட்ட மூலதனம் வட்டித் தொகைகளுடன் சேர்ந்து போதிய அளவு அதிகரித்தால் சௌகரியத்துக்குத் தக்கபடி உதவித் தொகையை அதிகப்படுத்தவோ சம்பள உதவி பெறுபவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்தவோ சர்வகலாசாலையாருக்கு அதிகாரம் உண்டு.

6. மேலே சொன்னபடி தொகை செலவான பிறகு மிச்சம் ஏற்படுமானல் அந்தத் தொகையைச் சைவசித்தாந்தப் படிப்புக்குப் பாடமாக உள்ள சிவஞான சித்தியாரின் பிரதிகளை வாங்கிச் சம்பள உதவி பெறும் மாணுக்கர்களுக்கு இலவசமாக விநியோகிக்கலாம்.

7. ஒவ்வொரு வருஷத்தின் முடிவிலும் வரவு செலவு கணக்குகளையும் சம்பள உதவி பெறும் மாணுக்கர்களின் பெயர்களையும் தரும ஸ்தாபகரவர்களுக்கும் அவர்கள் வார்சுகளுக்கும் விண்டி கேட்டார் அனுப்பவேண்டும்.

## *VIII.* ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.

சென்னை ஸர்வகலாசாலை ரிஜிஸ்டிராருக்கு 13-6-46ல் எழுதிக் கொடுத்த ஒப்பந்தப் பத்திரம். 19-6-36ல் திருவிடைமருதூர், ஸப்ரிஜிஸ்டார் ஆபீஸில் பதிவாகியுள்ளது.

சென்னைச் சர்வகலாசாலையார் ஏற்படுத்தியுள்ள தனித் தமிழ் (7-D) வித்துவான் பரீக்ஷைக்கு அனுப்பும்படி மாணாக்கர்களைப் பயிற்றுவதற்கு இக்கல்லூரி ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளவர்கள் ஞாபகார்த்தமாகத் தமிழ் மொழியின் அபிவிருத்தி கருதி அமைக்கப்பெற்றது.

2. இக்கல்லூரி நடைபெறும் பொருட்டுப் பொறுப்பாகக் கொடுக்கப்பெற்ற சொத்து மாயூரம் தாலூகா, நக்கம்பாடி கங்காதரபுரத்து வட்டங்களில் கீழையனூர்குடி கிராமத்தில் நன்செயும் புன்செயும் சேர்ந்து ஏகர் 183, செண்டு 42 இவை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்களுடைய பேரில் பட்டாவாகி அவர்களுடைய ஏகபோக அனுபவத்தில் உள்ளன. இவற்றின் வருமானம் ஒன்றரை லக்ஷம் ரூபாயும் வருஷ வரும்படி ரூபாய் எண்ணாயிரமும் ஆகும்.

3. மேற்படி சொத்துக்கள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்களாலும் அவர்கள் வார்சுகளாலும் அனுபவிக்கப்பெறும்.

4. இந்தச் சொத்துக்களிலிருந்து எச்செலவும்போக வரும் நிகர வரும்படி இக்கல்லூரியின் நிர்வாகத்துக்காக நியமிக்கப்பெற்றுள்ள கமிட்டியாரிடம் ஒப்புவிக்கப்படும். அவர்கள் கல்லூரியை நடத்துவதற்கு இத்தொகையை உபயோகித்து வருவதோடு தொகைகளை ஒழுங்கான இனங்களில் ஜாக்கிரதையாக வட்டிக்குப் போட்டு வைக்கவும், கல்லூரி செவ்வையாக நடைபெறுவதற்கு வேண்டிய சமயங்களில் தொகையைப் பயன்படுத்தவும் பொறுப்பாளிகளாவர்.

5. சர்க்கார் கிராண்டு கல்லூரிக்கு ஏதேனும் அதிக வரும்படி. இதையும் மேலே சொன்னவாறு பரிபாலிக்கவேண்டும்.

6. ஆசிரியர்களுடைய சம்பளம், புத்தக சாலையை நடத்தல், கல்லூரியின் கட்டிடத்தைப் பாதுகாத்தல் இவை சம்பந்தமாக அவ்வப்போது ஏற்படும் அவசியமான செலவுகளாகிய இவற்றிற்கே மேலேசொன்ன வருஷ வரும்படியை உபயோகிக்க வேண்டும்.

7. கமிட்டியார் வரவு செலவு கணக்கை ஒழுங்காக வைத்திருந்து மாதந்தோறும் அதை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்களிடம் சேர்ப்பிக்கவேண்டும்.

8. சர்க்கார் கிராண்டு உள்படக் கிடைக்கும் வருஷ வரும்படிக்கு ஏற்றபடி செலவு செய்யவேண்டும். மிச்சம் ஏற்பட்டால்

அதனை 'ரிசர்வ் பண்டு'க்கென்று கார்பங்கைத் தனியே குறிப்பிட்டுச் சர்க்கார் கடன் பத்திரங்களிற் போட்டுவைக்கலாம்.

9. சொத்தின் வருஷ வரும்படி கமிட்டியாரிடம் ஒப்புவிக்கப்படாவிட்டால் ஸ்தாவர சொத்திலிருந்து கிடைக்கும் நிகர வரும்படியை மட்டும் கமிட்டியார் கேட்டு வாங்கிக்கொள்ளலாம்.

10. எந்தக் காலத்திலேனும் மேலே குறிப்பிட்ட வரும்படிகளுக்கு மேலே செலவு ஏற்படுமானால் கும்பகோணம் தாலூகா மணிக்குடி கிராமத்தில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகளவர்கள் பேரால் பட்டாவாகி அவர்கள் அனுபவத்தில் உள்ள எழுபதினாயிரம் ரூபாய் பெருமானம் உள்ள நன்செய் எகர் 61 செண்டு 80, புன்செய் எகர் 6 செண்டு 49 இவற்றிலிருந்து கிடைக்கும் ரூபாய் 4,000 மேற்படி அதிகச் செலவுக்கு உத்தரவாதம் ஆகும்.

# IX. இசைத் தமிழ்த் தருமநிதி

## ரூ. 1,00,000 ஒரு லட்சம் ரூபாய்மதிப்புள்ள நிலங்கள்.

1. இந்தத் தருமம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஆதி குமரகுருபரஸ்வாமிகளின் ஞாபகார்த்தமாக ஸ்தாபிக்கப்பெற்றது. இசைக் கருவிகளுடன் இசைத் தமிழை அபிவிருத்தி செய்வதும் அதன் பொருட்டுத் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி உயர்வகுப்பு மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் அளிப்பதும் இத் தருமத்தின் நோக்கமாகும்.

2. இதற்கு வேண்டிய வருமானம் அளிக்கும் சொத்துக்களாகிய சுமார் 200 ஏக்கர்கள் நன்செய், புன்செய் நிலங்களும், மனைகளும், கட்டிடங்களும் எத்தக்குடி, பைங்காட்டூர், அக்கரைக்கோட்டகம், குறிச்சி, நல்லூர், வாட்டார்வட்டம் முதலிய தஞ்சை ஜில்லா மன்னார்குடி தாலூகா கிராமங்களில்இருக்கின்றன; இவை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி தம்பிரான் சுவாமிகள் அவர்களின் பெயரில் பட்டாவுடன் அவர்களது அனுபவத்திலிருப்பவை. சொத்தின் மதிப்பு ஒருலட்சம் ரூபாய். வருஷ வருமானம் சுமார் ரூ 5000/- (ரூபாய் ஐயாயிரம்.)

3. இந்தச் சொத்துக்கள் இனியும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அனுபவத்திலும், அவர்களுக்குப்பின் வரும் உரிமையுள்ளவர்களுடைய அனுபவத்திலும் இருந்து வரவேண்டும்.

4. சொத்தின் வருஷ வரும்படியில் சர்க்கார் கிஸ்தி, கிராம சிப்பந்திச் செலவுகள், கிராம சமுதாயம், மராமத்துச் செலவுகள், கிராம தேவதை உத்ஸவச் செலவுகள் முதலியனபோக மிஞ்சும் தொகை கல்லூரி நிர்வாகக் கமிட்டியிடம் ஒப்புவிக்கப்பெறும். கமிட்டியார் இவ்வருமானத்தில் 10 சத விகிதத் தொகையை ரிசர்வ் நிதிக்காக ஒதுக்கி சர்க்கார் ஜாமீன் பத்திரங்களில் முதலீடு செய்த பிறகு மீதத் தொகையைக் கீழ்க்குறிப்பிட்ட விதம் செலவிடுவர். தொகைகளைச் சரியான முறையில் முதலீடு செய்து தருமத்தின் நோக்கத்தைச் சரிவர நிறைவேற்றுவதற்கு அவ்வப்பொழுது உபயோகப்படும்படி செய்வது கமிட்டியின் பொறுப்பாகும்.

5. உபாத்தியாயர்களின் சம்பளம், சங்கீதக் கருவிகள் வாங்குவதற்கான செலவுகள், மற்றும் கீழே ii, iii, iv பாராக்களில் குறிப்பிட்ட செலவுகள், மேலும் ஸ்தாபன நிர்வாகத்திற்கும், இதர நோக்கங்களைப் பூர்த்தி செய்வதற்கும் அவசியமான செலவுகளுமே வருஷ வருமானத்தினின்றும் செலவாகக்கூடிய நியாயமான செலவுகளாகும்.

(i) (a) செந்தமிழ்க் கல்லூரி மாணவர் ஆண், பெண் ஜாதி வகுப்புப் பேதமின்றிப் பயிற்சியில் கலந்துகொள்ளலாம்.

(b) இது சம்பந்தமாக நியமிக்கப்பட்டுள்ள உபாத்தியாயர்கள் உயர்தர வகுப்பு மாணவர்களில் வாய்ப்பாட்டுப் பாடுவதற்குத் தகுதியுடையவர்களையும் தனி வாத்தியங்கள் வாசிக்கத் தகுதியும் விருப்பமுமுடையவர்களையும் பொறுக்கி எடுப்பர்.

(c) கல்லூரியின் பாடங்களைப் பாதிக்காமல் தினசரி ஒரு மணி நேரம் இதற்காகச் செலவிடப்படும்.

(d) இசைத் தமிழ் என்பது தேவாரத் திருமுறைகளைப் பண் ஒன்றப் பாடுதலும், மற்றும் தமிழ்ப் பாடல்களை இன்னிசையுடன் பாடுதலும் ஆம்.

(e) இசைக் கருவிகளாவன:—

1. வீணை, 2. தம்பூரா, 3. பிடில், 4. ஹார்மோனியம், 5. புல்லாங்குழல், 6. கஞ்சிரா, 7. மிருதங்கம், 8. கடம், 9. ஜலதரங்கம்.

உபாத்தியாயர்கள் வாய்ப்பாட்டிற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவர்களுக்கு இசைக் கருவிகளுடன் தமிழ்ப் பாட்டுக்களில்

பயிற்சியை யளிக்கவேண்டும். இசைக் கருவிகளில் மட்டும் பயிற்சி பெறத் தகுதியுடையவர்களுக்கு அந்த அந்த வாத்தியங்களில் பயிற்சியளிக்கவேண்டும். இசைக் கருவிகள் முதலில் மிக அவசியமாகக் கருதப்படும் வாத்தியங்களிலே பயிற்சி ஆரம்பிக்க வேண்டும். பயிற்சி முன்னேற்றமடையுங்கால் அவ்வப்பொழுது தேவைக்குத் தகுந்தபடியும் பொருள் நிலைமைக்குத் தகுந்தபடியும் மற்ற வாத்தியங்களிற் பயிற்சி அளிக்கப்படும்.

*ii*. வருஷா வருஷம் ஒரு சஞ்சிகை வெளியிட்டு அதில் வாய்ப் பாட்டிலும் வாத்தியத்திலும் பயிற்சி பெறுபவர்களின் எண்ணிக்கை விவரங்கள் இசை விஷயமாக நிபுணர்களின் ஆராய்ச்சிக் குறிப்புகள் கீழே *iv*-வது பாராவில் குறிப்பிட்டுள்ள இசைத் தமிழ் மகாநாடு வருஷா வருஷம் கூடுவதுபற்றிய விவரங்கள் முதலியவை அச்சிடப்படும்.

*iii*. பயிற்சி பெறுவோர்களுக்கு ஊக்கம் தருவதற்காக வருஷா வருஷம் வாய்ப்பாட்டிற்கு ரூ. 50-ம், வாத்தியங்களுக்கு ரூ. 50-ம், ரொக்கப் பரிசு இதற்காக நடைபெறும் போட்டியில் சிறப்பாகத் தேர்ச்சி பெறுபவருக்கு அளிக்கப்படும். இந்தத் தொகை கமிட்டி வசமுள்ள நிதியினின்று செலவிடப்படும்.

*iv*. இசைத் தமிழை அபிவிருத்தி செய்வதற்காக வருட வருமானத்தில் மிகுந்திருக்கும் உபரித் தொகையைக்கொண்டு ஆதி குமாரகுருபர ஸ்வாமிகளின் வருஷ நினைவு விழாவின்போது இசைத் தமிழ் மகாநாடு ஒன்று கூட்டித் தேவாரத் திருமுறைவாணர்களும், இதர தமிழ்ப் பாடல்களில் தேர்ந்த வித்வான்களும் இசைக்கருவி வல்லுநர்களும் மகாநாட்டிற்கு வருவிக்கப் பெற்று இசையரங்கு நடத்தப்பெறும்.

6. மேலே 5-வது பாராவில் கண்ட விஷயங்களுக்காகச் செலவானபின் வருமானத்தில் மிச்சமிருந்தால், சங்கீதப் பயிற்சிபெற்று வரும் மாணவர்களில் தகுதி பெற்றவருக்கு உபகாரச் சம்பளங்கள் கொடுக்கப்படும். இந்த உபகாரச் சம்பளங்கள் மாதா மாதம் ரூ. 10 முதல் ரூ. 15 வரையில் வருஷத்திற்கு 10 மாதங்களுக்கு அளிக்கப்படும்.

7. மேலே 4-வது பாராவில் குறித்தபடி சொத்தின் வருஷ வருமானம் கமிட்டியின் வசம் ஒப்புவிக்கப்படாவிட்டால் மேலே குறித்த ஸ்தாவர சொத்திலிருந்து கிடைக்கக்கூடிய நிகர வருஷ வருமானத்தை மட்டுமே பெறக் கமிட்டிக்கு உரிமையுண்டு.

8. வரவு செலவு சம்பந்தமான கணக்குகளை ஒழுங்காக எழுதி மாதா மாதம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் பார்வைக்கு அனுப்புவது கமிட்டியின் பொறுப்பு.

இது மதராஸ் கல்வியிலாகாத் தலைவரது 17-5-47தேதியிட்ட ரூ. ஆர். ஸி. 114 cf கடிதப்படி அங்கீகாரம் பெற்றிருக்கிறது.இது சம்பந்தமான பத்திரம் 16-5-47ல் மன்னார்குடி சப்ரிஜிஸ்திராராபீசில் 1432-ஆம் நம்பர் தஸ்தாவேஜாக ரிஜிஸ்தர் செய்யப்பெற்றுள்ளது.

## X. கால்நடை வைத்தியசாலை,

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர்

## உ. வே. சாமிநாதையரவர்கள் ஸ்காலர்ஷிப்.

28-6-1947ல் எழுதிவைத்த

டிரஸ்டு செட்டில்மெண்டு பத்திரம்

5-9-47ல் திருவிடைமருதூர் ஸப்ரிஜிஸ்டிராராபீஸில் 1525-ம் நம்பர் தஸ்தாவேஜாகப் பதிவு செய்யப்பெற்றது.

1. திருப்பனந்தாளில் கவர்ன்மெண்டாரால் நடத்தப்பெற்று வரும் கால்நடை வைத்தியசாலைக்கு நம்மாலும் தஞ்சை ஜில்லா போர்டாராலும் வருஷந்தோறும் வர்த்தனை கொடுக்கப்பெற்று வருவதில் நாம் வருடம் ஒன்றுக்குக் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட தொகை ஒரு வருஷச செலவின் மொத்தத் தொகையில் கால் பங்கு அல்லது ரூ. 683—4—0 இந்த இரண்டில் எது குறைவோ அதுவேயாகும். இத் திட்டம் சென்னை அரசாங்கத்தார் 2782-எம் எஸ் டிவல்ப்மெண்டு 27-6-44 தேதியுள்ள உத்தரவில் அங்கீகரிக்கப் பெற்றிருக்கிறது.

2. நாம் பட்டா மிராசுடன் நாகபட்டினம் தாலூகா அத்திப்புலியூர் வட்டத்தில் அனுபவித்து வருகிற எக்கர் 133 செண்டு 6 நன்செய் புன்செய் நிலமும். கும்பகோணம் தாலூகா திருபுவனம் வட்டத்தில் புன்செய் எக்கர் 1 செண்டு 77 நிலமும் ஆக மொத்தம்

எக்கர் 134 செண்டு 83 நிலங்கள் ஷை முதல் பாராவில் காணப் பெற்றிருக்கும் கால்நடை வைத்தியசாலைக்கு வர்த்தனைத் தொகை கொடுத்து வரவும் இன்னும் கீழே காணும் இதர சில தருமங் களுக்காகவும் ஒதுக்கி வைக்கப்பெற்றுள்ளன.

3. ஷை சொத்து நம்மாலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ள வர்களாலும் எப்பொழுதும் போல் அனுபவிக்கப்பெற்றுவரும்.

4. ஷை சொத்திலிருந்து எச் செலவும் போகவுள்ள நிகர வரு மானம் இதில் காணப்பெற்றிருக்கும் தருமங்களுக்குச் செலவிடப் பெறும்.

5. கால்நடை வைத்தியசாலைக்குக் கொடுத்தது போக எஞ்சி யுள்ள தொகையிலிருந்து கும்பகோணம் கவர்ன்மெண்டு காலேஜில் நம்முன்னோரால் ஏற்படுத்தப் பெற்றிருப்பதும் ஷை காலேஜ் பழைய மாணவர்களின் சங்கத்தாரால் 10-2-43-ம் தேதி கடிதத்தில் அங்கீ கரிக்கப்பெற்றிருப்பதுமான மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் ஸ்காலர்ஷிப்பு அல்லது உபகாரச் சம்பளம் அளிப்பதற்குச் செலவிடப்பெறும். ஷை உபகாரச் சம்பளம் ஒரு மாணவருக்கு மட்டும் கொடுப்பதாகும். உபகாரச் சம்பளம் பெறுபவருக்கு இண்டர்மீடியேட்டு வகுப்புக் களில் படிக்கும்பொழுது வருடம் ஒன்றுக்கு ரூ. 130-ம், பி. ஏ. வகுப்புக்களில் படிக்கும்பொழுது ரூ. 170-மாக அளிக்கப்பெறும்.

6. ஷை தருமங்களுக்குக் கொடுத்தது போக மிச்சமாகும் தொகையை இந்தத் தருமம் ஏற்படுத்தியவர்களும் அவர்களுக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களும் தங்கள் இஷ்டம்போல் இதர தரும காரியங்களுக்காகச் செலவிடுவார்கள்.

7. எக்காரணத்தைக் கொண்டாவது திருப்பனந்தாளில் ஏற் படுத்தப்பெற்றிருக்கும் கால்நடை வைத்தியசாலை பிற ஊர்களுக்கு மாற்றப்பெற்றாலும் அல்லது நிறுத்தப்பெற்றாலும் அதற்குக் கொடுக் கப் பெற்றுவரும் கண்டிரிபியூஷன் தொகை நிறுத்தப்பெற்று ஷை தொகை வேறு தரும காரியங்களுக்காக இந்தத் தருமம் ஏற்படுத்தி யவர்களின் இஷ்டம்போல் செலவிடப்பெறும்.

# XI ஸ்ரீகாசியில் ஸ்ரீகுமாரசுவாமி அன்னதானக் கட்டளை.

ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமாரசுவாமியென்னும் பெயரால் மிகப் பிரசித்தமாக வழங்கி வரும் ஸ்ரீல ஆதி குமரகுருபர சுவாமிகள் அவர்களின் நினைவு நாளாகிய வைகாசிமீ அமரபக்ஷம் திருதியை தினத்தில் அன்னதான தருமத்திற்காக ரூ. 10,000-க்கு எழுதி வைக்கப்பெற்ற எண்டௌமெண்டு. 5-7-47-ல் திருவிடைமருதூர் ஸப்ரிஜிஸ்திரார் ஆபீஸில் 18-ம் நம்பர் தஸ்தாவேஜாகப்பதிவு செய்யப்பெற்றது.

2. இந்தத் தருமத்தின் மூலதனம் 1951-54-ம் வருஷத்திய 3சத விகிதம் வட்டியுள்ள ரூ. 10,000 சர்க்கார் கடன் பத்திரமாயுள்ளது. ஸடாக் சர்டிபிகேட் நெ. எம். எஸ். 1333. இதன் நிர்வாகம் நம்மிடத்திலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களிடத்திலுமே இருந்துவரும்.

3. இதிற்கண்ட சர்க்கார் கடன் பத்திரத்திலிருந்து கிடைக்கும் வட்டித்தொகை ஸ்ரீ காசியில் ஆண்டுதோறும் வைகாசி அமரபக்ஷம் திருதியை தினத்தில் பிராமண போஜனத்திற்காகவும் மகேசுவர பூஜைக்காகவும் செலவிடப்பெறும்.

4. அந்த அந்த வருஷத்தில் உள்ள விலைவாசியை அனுசரித்து ஏற்படுத்தும் திட்ட ஜாப்தாவில் உள்ளபடி அன்னதானம் நடத்தப்பெறும்.

5. இந்தத் தருமம் ஒவ்வொரு வருஷத்திலும் நம்மாலும் நமக்குப்பின்வரும் உரிமையுள்ளவர்களாலும் நடத்தப்பெறும். இந்தத் தருமநிதி நம்மாலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களாலும் வேறு எந்தக் காரியத்துக்கும் உபயோகப்படுத்தப் படமாட்டாது.

# XII. இராமேசுவரத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் அன்னதானக் கட்டளை.

இராமேசுவரத்தில் ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் அவர்களின் நினைவு நாளாகிய வைகாசி அமரபக்ஷம் திருதியை

தினத்தில் அன்னதான தருமத்திற்காக ரூ. 10,000 க்கு எழுதி வைக்கப்பட்ட எண்டௌமெண்டு 5-7-47ல் திருவிடைமருதூர் ஸப்ரிஜிஸ்திரார் ஆபீஸில் 17-ம் நம்பர் தஸ்தாவேஜாகப் பதிவு செய்யப்பெற்றது.

2. இந்தத் தருமத்தின் மூலதனம் 1951—54-ம் வருஷத்திய 3சத விகிதம் வட்டியுள்ள ரூ. 10,000 சர்க்கார் கடன் பத்திரமாயுள்ளது. ஸ்டாக் சர்டிபிகேட் எம். எஸ். நெ 1334. இதன் நிர்வாகம் நம்மிடத்திலும் நமக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களிடத்திலுமே இருந்து வரும்.

3. இதிற் கண்ட சர்க்கார் கடன் பத்திரத்திலிருந்து கிடைக்கும் வட்டித்தொகை இராமேசுவரத்தில் வைகாசி மாதம், அமரபட்சம் திருதியை தினத்தில் பிராமண போஜனத்திற்காகவும், மகேசுவர பூஜைக்காகவும் ஆண்டுதோறும் செலவிடப்பெறும்.

4. அந்த அந்த வருஷத்தில் உள்ள விலைவாசியை அனுசரித்து ஏற்படுத்தும் திட்ட ஜாப்தாவில் உள்ளபடி அன்னதானம் நடத்தப்பெறும்.

5. இந்தத் தருமம் ஒவ்வொரு வருஷத்திலும் நம்மாலும் நமக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களாலும் நடத்தப்பெறும். வேறெந்தக் காரியத்துக்கும் உபயோகப்படுத்தப் படமாட்டாது.

## XIII திருநள்ளாற்றில் ஏழைகளுக்கு அன்னமளித்தல்

முதலிய தருமத்திற்கு எழுதிவைத்த டிரஸ்டு செட்டில்மேண்டு 17-9-47ல் எழுதி, திருவிடைமருதூர் ஸப் ரிஜிஸ்டிரார் ஆபீஸில் அதே தேதியில் 21-ம் நெம்பர் தஸ்தாவேஜாகப் பதிவுசெய்யப்பெற்றது.

1. இதற்குரிய மூலதனம் ரூ. 100-க்கு ரூ; 3/- வீதம் வட்டி கிடைக்கும் ரூ. 3,000 (ரூபாய் மூவாயிரம்) பெறுமான எம். எஸ். 017181-ம் நமபர் உள்ள சர்க்கார் கடன் பத்திரமாகும். இதன் பரிபாலனம் நம்மிடத்திலும் நமக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களிடத்திலும் இதன் 7-வது பாராவில் கண்டபடியுள்ள ஐந்து உத்தி

யோகங்களை அவ்வப்போது வகிக்கிற ஐந்து நபர்கள் அடங்கிய ஒரு கமிட்டியின் பொறுப்பில் இருந்து வரவேண்டும்.

2. இந்தச்செட்டில்மெண்டு பிரஞ்சு இந்தியா திருநள்ளாறு ஆலயத்துக்கு நம்மால் 28-6-1916 ல் இனமாக அளிக்கப்பெற்றிருக்கும் புது இரதத்தில் வருஷந்தோறும் ஆவணி மூலத்தில் சுவாமி புறப்பாடு செய்யும் விசேஷத்துக்கும் ஷை தினத்தில் ஏழைகளுக்கு அன்னம் அளிக்கவும் ஏற்படுத்தப் பெற்றிருக்கிறது.

3. இந்த மூலதனத்திலிருந்து வருஷந்தோறும் கிடைக்கும் வட்டியிலிருந்து ரூ. 20 (ரூபாய் இருபது) ரிசர்வ் பண்டாக ஒதுக்கி வைத்தது போகப் பாக்கித் தொகை ரூ. 70 ரூபாய் எழுபதையும் வருஷந்தோறும் ஷை இரதத்தில் சுவாமி எழுந்தருளச் செய்யவும் ஏழைகளுக்கு அன்னம் அளிக்கவும் செலவிடவேண்டியது. இந்த ரூ. 70 ரூபாய் எழுபதையும் வட்டி வருமானத்துக்குத் தகுந்தவாறு கூட்டவோ குறைக்கவோ கமிட்டியாருக்கு உரிமையுண்டு.

4. ஒவ்வொரு வருஷமும் ஆவணி மாதம் மூல நக்ஷத்திரக் கொண்டாட்ட நன்னாளில் ஷை இரதத்தில் சுவாமி எழுந்தருளச் செய்யவேண்டியது. ஷை தினத்தில் ஷை ஆலயத்தில் அபிஷேக அலங்கார நைவேத்தியங்களுக்காக ரூ. 35 (ரூபாய் முப்பத்தைந்துக்குள்) ஏற்படுத்தும் திட்ட ஜாப்தாவில் கண்டபடி செலவு செய்ய வேண்டும்.

5. ஷை ஆவணி மூலம் திருநாளில் ஷை இரதம் இழுக்கும் பணியைச்செய்யும் ஆட்களுக்கும் இதர ஏழை மக்களுக்கும் அன்னம் அளிக்கும் தருமத்துக்காக ரூ. 35 (ரூபாய் முப்பத்தைந்து) திட்ட ஜாப்தாப்படி செலவிடப்படும்.

6. இந்த மூலதனத்தொகை எப்போதாவது சர்க்காரால் திருப்பி அளிக்கப்பட்டால் அதை அச்சமயம் மிக வுயர்ந்த சர்க்கார் கடன் பத்திரங்களில் முதலீடு செய்யவேண்டியது.

7. இந்தக் தரும பரிபாலனம் செய்வதற்குரிய கமிட்டியில் அங்கத்தினர்கள் ஐவரும் நமமிடத்திலும் நமக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களிடத்திலும் வேலை பார்த்து வரும் காறுபாறு, அட்டவணை, ஷராப், இமார்த்தி, இராயசம் ஆக ஐந்து உத்தியோகங்களை முறையே வகிப்பவர்களாவர்.

8. இதன் 3-வது பாராவில் கண்ட ரிஸர்வ் பண்டு தொகை ரூ. 200 ரூபாய் இருநூறுக்கு மேல் கூடின பிறகு ரூ 200-க்கு

மேற்படும் தொகை வட்டி தினத்தில் இந்தத் தரும ஸ்தாபகரவர்களுடைய உசிதம்போல் அன்னமளிக்கும் தருமத்திற்குச செலவிடப்பெறும்.

9. இந்த மூலதனத் தொகையும் பின்னும் சேர்க்கப்பெறும் தொகைகளும் நமது பேரிலும் நமக்குப் பின்வரும் உரிமைவுள்ளவர்கள் பேரிலும் இருந்து வரவேண்டும்.

## XIV காசியில்
## ஸ்ரீகுமாரசுவாமி அன்னதானக்கட்டளை
## ரூ 1,7000

ஸ்ரீ குமாரசுவாமி என்ற பெயருடன் காசியில்பிரபலமாகவிளங்கிய ஸ்ரீஆதி குமரகுருபர சுவாமிகளுடைய ஞாபகார்த்தமாக ஆண்டுதோறும் மார்கழி மாதத்தில் அதாவது டிசம்பர் 16-ந் தேதி முதல் ஜனவரி 14-ந் தேதி முடிய ஸ்ரீ காசியில் அன்னதானம் நடைபெறும் பொருட்டு விசேஷ பக்தியுடன் இந்தக் கட்டளை அமைக்கப்பெற்றது.

இது சம்பந்தமான பத்திரம் 8-10-47-ல் திருவிடைமருதூர் சப்ரிஜிஸ்டிராராபீஸில் 22-ம் நம்பர் தஸ்தாவேஜாகப் பதிவு செய்தது.

2. இதற்கு ஏற்படுத்திய மூலதனமாகிய ரூ. 17,000 நூற்றுக்கு 3 வீதம் வட்டி வரக்கூடிய ஸர்க்கார் கடன் பத்திரமாக உள்ளது. இந்தக் கட்டளை இதனை ஸ்தாபித்தவர்களாலும் அவர்களுக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலிக்கப்பெற்று வரும்.

3. இத்தக் கடன் பத்திரத்திலிருந்து வருஷந்தோறும் கிடைக்கும் வட்டித் தொகையை மார்கழி மாதத்தில் அதாவது டிசம்பர் 16-ந் தேதி முதல் ஜனவரி 14-ந் தேதி முடிய, காசியிலுள்ள நமது சத்திரத்தில் நித்தியப்படி வழக்கமாக நடக்கும் அன்னதானத்துடன் சிறப்பாகப் பிராமண சமாராதனைக்கும், மகேசுவர பூஜைக்கும் (சைவர்களுடைய சாப்பாட்டுக்கும்) உபயோகிக்க வேண்டும்.

4. சாப்பாடு போடவேண்டிய காலத்தில் இருக்கும் சாமான்களின் விலைவாசிக்கு ஏற்றவாறு ஜாப்தா போட்டு அதன்படி சாப்பாடு போடப்படும்.

5. வருஷந்தோறும் இந்தத் தருமத்தை இதன் ஸ்தாபகரவர்களும், அவர்களுடைய வார்சுகளும் நடத்தி வருவார்கள். ஸ்தாபகரவர்களுடைய நோக்கத்துக்கு மாறான வேறு எந்தக் காரியத்துக்கும் இந்தக் கட்டளையை மாற்றக்கூடாது.

XV. திருப்பனந்தாளிலுள்ள ஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரி பேருக்கு ஒரு லக்ஷம் 1,00,000 ரூபாய் பெறுமானமுள்ள நிலங்களைப் பொறுத்து எழுதிவைத்த டிரஸ்டு செட்டில் மெண்டு பத்திரம். 16-7-47ல் திருவிடைமருதூர் ஸப்ரிஜிஸ்திரார் ஆபீஸில் 2152ஆம் நம்பர் தஸ்தாவேஜாகப் பதிவு செய்யப்பெற்றது.

1. நமக்கு முன் ஸ்தானத்தில் இருந்து விளங்கிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகளவர்கள் ஞாபகார்த்தமாகத் தமிழ் மொழியின் ஆக்கங் கருதி ஒரு தமிழ்க் கல்லூரி திருப்பனந்தாளில் அமைக்கப்பெற்றது. சென்னை அரசாங்கத்தார் 17-9-45ம் தேதியுள்ள *Dis. No.* 3154/45 உத்தரவில் கல்லூரியை அங்கீகரித்திருப்பதோடு சென்னைச் சர்வகலாசாலையார் 24-5-46ம் தேதியுள்ள *A.* 2 88 கடிதத்தின் மூலம் கல்லூரியை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

2. பத்திரத்திற் குறிப்பிட்ட சொத்துக்கள் தஞ்சை ஜில்லா, கும்பகோணம் தாலூகா, வீராக்கண்வட்டம், ஆனைக்கோயில் கிராமத்தில் உள்ள நன்செய், புன்செய், நத்தம் மூன்றும் சேர்ந்து 97 ஏகரா 37 செண்டு விஸ்தீரணமுள்ள நிலங்களாகும். இவற்றின் பெறுமானம் ரூ- 1, 00,000 (ஒரு லக்ஷம்). ஷை நிலங்களிலிருந்து எச்செலவும் (சர்க்கார் கிஸ்தி, கிராமசிப்பந்திகள் செலவு, கிராம சமுதாயம், மராமத்துச் செலவு முதலியன) போக நிகர வரும்படி வருஷத்துக்கு ரூ. 5 000 ஆகும். இந்த நிலங்கள் நம் பேரில் பட்டாவாகி நமது அனுபவத்தில் இருக்கின்றன.

ஷை செந்தமிழ்க் கல்லூரியில் படிக்கும் ஏழையாகவும் தகுதியாகவும் உள்ள மாணாக்கர்களுக்கு உணவளிக்க இந்த நிகர வரும்படியை நிலையாக உபயோகித்து வரவேண்டும்.

3 ஷை சொத்துக்கள் நம் அனுபவத்திலும் நிர்வாகத்திலும் நம் வார்சுகளுடைய அனுபவத்திலும் நிர்வாகத்திலும் இரண்டாவது பாராவில் கண்ட ஏற்பாட்டுக்கு உட்பட்டு இருந்துவரும்.

4 இத்தனை மாணாக்கர்களுக்கு உணவளிக்கலாம் என்பது, அவர்களைத் தேர்ந்தெடுத்தல், சாப்பாடு வகை முதலியன கிடைக்கக் கூடிய பணத்துக்குத் தக்கபடி உசிதம்போல் நம்மாலும் நம் வார்சுகளாலும் நிச்சயித்து ஏற்பாடு செய்யப்படும்.

5. 2, 4 பாராக்களிற் குறித்தபடி மாணாக்கர்களுக்கு உணவளித்த பிறகு ஏதேனும் மிச்சப்படுமானால் நாமும் நம் வார்சுகளும் தீர்மானிக்கிறபடி இதுபோன்ற வேறு தர்மங்களுக்கு அந்த மிச்சத் தொகை உபயோகிக்கப்படும்.

6. மேலே குறிப்பிட்ட சொத்துக்களின் வரும்படியை மேலே விவரித்துள்ளபடி யல்லாமல் வேறு எந்தக் காரியத்துக்கும் உபயோகிக்கக் கூடாது.

## XVI திருப்பனந்தாளில் ஜன வைத்தியசாலை

திருப்பனந்தாள் மடத்தைச் சார்ந்த மணிக்குடி கிராமத்திலுள்ள 44 ஏகரா 22 செண்டு நன்செய் நிலங்களின் நிகர வரும்படியை வருஷந்தோறும் வர்த்தனையாகக் கொடுத்து இந்த வைத்தியசாலை செவ்வையாக நடந்து வருகிறது.

## XVII. ஸ்நான கட்டம்.

திருப்பனந்தாளில் ஓடுகின்ற சுப்பிரமணிய நதி என்கிற மண்ணியாற்றில் பொது ஜனங்களின் உபயோகத்துக்காக ரூ. 2900 செலவில் நல்ல படித்துறைகளோடு கூடிய ஸ்நான கட்டமொன்று அமைக்கப்பெற்று ஜனங்களுக்கு மிக்க பயனளித்து வருகிறது.

## XVIII. மணிக்கூண்டு.

கும்பகோணம் நகரத்தில் மகாமகக் குளத்துக்கருகே ஒரு பிரதானமான இடத்தில் ரூ. 25,000 செலவில் அழகான ஒரு மணிக்கூண்டு கட்டப்பெற்று விளங்குகிறது.

## XIX ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீலஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அன்னதானக் கட்டளை ரூ. 9,000.

இந்தப் பத்திரம் 1-11-47-ல் எழுதி அதேதினம் திருவிடைமருதூர் ஸப்ரிஜிஸ்டிரராபீஸில் 26-ம் நம்பர் தஸ்தாவேஜாகப் பதிவு செய்யப்பெற்றது.

